# பஞ்ச கோச விவேகம்

ச. கந்தசாமி முதலியார்
முன்னாள் தமிழாசிரியர்
ஹிந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளி, சென்னை
துணைத் தலைவர்
சென்னை வேதாந்த சங்கம், சென்னை

விற்பனை உரிமை:

**பாரி நிலையம்**

59, பிராட்வே :: சென்னை - 1.

விலை: 1963 ரூ. 1-50.

*முதற் பதிப்பு: நவம்பர், 1963.*
உரிமை ஆசிரியருக்கு.

*ஆசிரியர் இயற்றிய வேறு நூல்கள்:*

1. காரிய சித்தியின் இரகசியம்
2. மணிக் குறள்
3. அறிவை விளக்கும் அருங் கதைகள்
4. வாழ்க்கையில் உயரும் வழி ... 1 00
5. உணவு மருத்துவம் ... 3 50
6. வாழ்க்கையின் அடிப்படை ... 2 00
7. அதிக இரத்த அழுத்தம் ... 1 25

பாரி அச்சகம், 127. பிராட்வே, சென்னை-1.

# நூன் முகம்

உப நிஷத்துக்களிலும் அத்வைத வேதாந்த நூல்களிலும் பஞ்ச கோசங்களின் இயல்பும் பஞ்ச கோச விவேகமும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. பனை யோலையிலும் மரப்பட்டையிலும் எழுதப்பட்ட காலத்தில் எதையும் சுருக்கமாகவே எழுதவேண்டியிருந்தது. காகிதத்தில் ஆயிரக்கணக்காக ஒரு நூலை அச்சியற்றக் கூடிய இக் காலத்தில், எளிய பொருள்களை விரிவாகக் கூறும் இக் காலத்தில், மக்கள் சுருக்கமாகக் கூறப்படும் அரிய பொருள்களைப் படிக்கிறதில்லை. சுவாமி இராம தீர்த்தரும், சுவாமி விவேகானந்தரும் உலகம் சுற்றிப் பேசிய பேச்சுக்கள் ஆங்கில மொழியை வளப்படுத்தி அம் மொழி யுணர்ந்தார்க்குப் பேரானந்தம் விளைக்கின்றன. அவை மொழி பெயர்க்கப்பட்டுத் தமிழர்க்கும் கிடைக்கின்றன. ஆயினும், தமிழ் முதலிய நம் நாட்டு மொழிகளில் பலர் பேசும் பேச்சு அம்மொழிகளில் சுருக்கெழுத்து (short hand) முதலிய சாதனங்கள் இல்லாமையால் நூல் வடிவமாக வருதற்கில்லை. அறிஞர் பேச்சுக்கள் நூல் வடிவமாக வராமல் பேச்சளவில் நின்றுவிடுவது மக்களுக்குப் பெரு நஷ்டமாம். அறிஞர் சொற்பொழிவுகள் நூல் வடிவமாக வரும்போது அவை அரிய பொருள்களை விளங்க விரித்துக் கூறுவனவாக இருக்கும்.

என் வேதாந்தச் சொற்பொழிவுகளைக் கேட்ட நண்பர்கள் அவற்றில் சிலவற்றைப் பாராட்டி அதனை எழுதிப் புத்தக மாக்க வேண்டும் என்று விரும்பினர். எனக்கு நேரம் கிடைப்பதில்லை. பஞ்ச கோச விவேகம் உபதேச ரூபமாகக் கேட்பதற்கும் அப்யாச ரூபமாகப் பயில்வதற்கும் உரியது. எனின், அவ்வளவு சிறந்தது; அவ்வளவு நுட்பமானது. உபதேச ரூபமாகப் பெறுவதற் குரியது என்று ஒன்றைத் தீர்மானித்தால் அது

பற்றிப் பொதுமக்கள் கூட்டத்தில் பேசாது விடுவதும், விவரித்துப் புத்தகம் எழுதாது விடுவதும் நம் பெரியோர் பலரது வழக்கம். அப்படி அவர்கள் நடந்து கொண்டதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. "பன்றியின் முன்னே முத்துக்களை இறைக்காதே" என்பது இயேசு கிருஸ்துவின் அறிவுரை. தகுதி யில்லார்க்கு உரைக்கலாகாது என்னும் விதியைப் பெரியோர் அனுசரித்தபடியால், நம் நாட்டிலும் வேறு நாடுகளிலும் மறைந்தொழிந்த அரிய உண்மைகள் பல.

ஆசிரியர் கட்டளையை மறுக்கலாகாது என்பதனால், சென்னை, வேதாந்த சங்கத்தில் 25 ஆண்டுகளாக வேதாந்த பாடங்கள் நடத்தி வருகின்றேனாயினும், நான் வேதாந்தச் சொற்பொழிவுகள் செய்ய விரும்புவதில்லை. அதற்குக் காரணம் "பல மக்களுக்கு நன்மை பயக்கும் சில பொருள்களை நான் பேச முடியும். பிறர் அவ்ற்றைப் பேசார்; பலர் அப்பொருள்களை விரும்பிக் கேட்பர்; அனுசரித்தால் அந்நாளிலிருந்து மேன்மையடைவர்; வேதாந்தச் சொற்பொழிவுகளைக் கேட்கச் சிலரே தகுதி யுடையவர்" என்று நான் கருதியதே.

எனினும் நண்பர்கள் வற்புறுத்தலுக் கிணங்கி வேதாந்தப் பொருள்களைப் பற்றியும் பேசி யிருக்கின்றேன். அவற்றில் பஞ்ச கோச வாழ்க்கை, பஞ்ச கோச விவேகம் என்னும் இரண்டு பொருள்களைப் பற்றி நான் பேசியதை நூல் வடிவமாக இப்போது வெளியிடுகின்றேன்.

"பஞ்ச கோச வாழ்க்கை" எழுதுவதற்கு நான் இளமையிற் படித்த பல பிரம்ம ஞான சங்க நூல்களின் அறிவு தூண்டுதலாய் இருந்தது. "பஞ்ச கோச விவேகம்" பொதுவாக சமஸ்கிருத பண்டிதர்களும் தமிழ்ப் பண்டிதர்களும் பேசுவதும் எழுதுவதும்போலன்றி வேறு வகையில் எழுதப்பட்டிருக்கிறது. அங்ங

ணம் புதுமுறையில் ஆராய்ச்சி வடிவமாக இதனை எழுதுவதற்கு இப்போது நம் நாட்டுக்குத் தலைவராய் (President) விளங்கும் சர். எஸ். ராதாகிருஷ்ணன் எழுதிய நூல்களைப் படித்த அறிவு உதவியாய் இருந்தது.

இவற்றுள் பஞ்சகோச வாழ்க்கை, சென்னை, சிந்தாதிரிப் பேட்டையில் இருந்து வெளிவந்து கொண்டிருந்த இணக்கம் என்னும் மாதப் பத்திரிகையில் 1947 செப்டம்பர் முதல் 1949 மார்ச் வரை வெளிவந்தது. அதன் ஆசிரியரும் எனது நண்பருமாகிய M.A. துரையரங்கம் பிள்ளை யவர்களுக்கு எனது நன்றியறிதலோடு கூடிய நமஸ்காரங்கள் உரியன. ஆசிரியர் கோ. வடிவேலுச் செட்டியார் அவர்கள் பதமலர் முடி சூடிய மகிழ்ச்சி மிகவும் உடையேனாயினும் அன்பர்கள் தரும் ஊக்கம் அன்றோ என்னை அறிஞனாகத் திகழவைத்துக் கொண் டிருக்கின்றது! இதனை வெளியிடுமாறு ஊக்கிய அன்பர்களுக்கு எனது நமஸ்காரங்கள் உரியன.

54. வரதாமுத்தியப்பன் தெரு,
சென்னை—1.
11—8—1963

அன்பன்
ச. கந்தசாமி முதலியார்.

KOVILOOR MADALAYAM
KOVILOOR - 630 307
(NEAR) KARAIKUDI
(PHONE

# நன்றி கூறல்

வாழ்க்கையின் அடிப்படை என்னும் நூலை வெளி யிட்டபோது, என் எல்லாப் புத்தகங்களின் வெளியீட் டுக்கும் மொத்தமாகப் பொருளுதவுமாறு நண்பர்களைக் கேட்டேன். சிலர்க்கே அவ்வாறு செய்ய முடிந்தது. பலர், "நீங்கள் ஒவ்வொரு புத்தகம் வெளியிடும் போதும் கேட்டுப் பெறுங்கள்" என்றே கூறினர். எனவே, நண்பர்கள், முன் புத்தகத்துக்குக் கொடுத்த தொகையையும் இந்தப் புத்தகத்துக்குக் கொடுத்த தொகையையும் சேர்த்து அவர்கள் பெயருக்குப் பதிவு செய்யவேண்டுவது எனது கடமை ஆயிற்று. ஒரு புத்தகத்துக்கு மாத்திரம் ரூபாய் 10 உதவியவர்கள் பெயரை அந்தப் புத்தகத்தில் மாத்திரம் பதிவு செய் திருக்கிறேன். என்னுடைய நண்பர்களும், மாணவர் களும், என்னுடன் பழகுபவர்களும், என்னை நேரே ஒரு முறைகூடப் பாராதவரும் ஆக அந்தணர் முதல் ஹரிசனர் வரை என் நூல் வெளியீட்டுக்கு உதவி செய்திருக்கின்றனர். 11ஆம் எண்ணில் குறிக்கப்பட் டிருக்கும் திருவாளர் அறவள்ளல் அண்ணமலை முதலியார் அவர்களை நான் பார்த்ததில்லை. அவ ரும் என்னைப் பார்த்ததில்லை. அவர் பலர்க்குப் பலவித மாகப் பேருதவி புரிபவர் என்று நண்பர் திரு. சுந்தர உடையார் அவர்கள் மூலம் கேள்விப்பட்டேன். உதவி வேண்டினேன். உதவி புரிந்தார். 3, 5, 55 எண்களில் குறிக்கப்பட்டவர்கள் தம் பெயரையே குறிப்பிட விரும்ப வில்லை. முதலில் குறிப்பிட்டிருக்கும் எனது மாணவ நண்பர் என் ஒவ்வொரு புத்தகத்துக்கும் ரூபாய் 100/- உதவுவதாக வாக்களித்துள்ளார். இவர்கள் அனைவ ருக்கும் எனது வாழ்த்துக்களையும் நன்றியறிதலையும் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

சென்னை
*11—8—1963.*

அன்பன்,
**ச. கந்தசாமி முதலியார்.**

# நன்கொடையாளர் பெயர்கள்

| | | |
|---|---|---|
| 1. | திரு. மணலி சீ. இராமகிருஷ்ண முதலியார், பி. ஏ. அவர்கள், பரம்பரை தரும கருத்தர், சென்னை - மணலி இலட்சுமண சாமி முதலியார் தர்ம ஸ்தாபனங்கள். | 200 00 |
| 2. | திரு. வி. வேணுகோபால் பிள்ளை அவர்கள், இரும்பு வியாபாரம், சென்னை. | 120 00 |
| 3. | சென்னை, ஹிந்து தியலாஜிகல் உயர் நிலைப் பள்ளியின் ஒரு ஆசிரிய நண்பர், பி. எஸ் ஸி., பி. டி. | 110 00 |
| 4. | திரு. சி. யோகசுந்தரம், எம். ஏ., எல்.டி. அவர்கள், வேலூர். | 110 00 |
| 5. | கோவடிவேலன். | 110 00 |
| 6. | திரு. கே. சாம்பசிவம் பிள்ளை அவர்கள், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை. | 110 00 |
| 7. | திரு. பி. இந்திரபோகு முதலியார், பி. ஏ., எல். டி., அவர்கள், Special District Educational officer, Cuddalore, South Arcot Dist. | 100 00 |
| 8. | சென்னை, ஹிந்து தியலாஜிகல் உயர் நிலைப்பள்ளியின் ஒரு பழைய மாணவர். | 100 00 |
| 9. | திரு. எஸ். இராமலிங்கம் செட்டியார் அவர்கள், 53. சைடன் ஹாம்ஸ் ரோட், பெரியமெட், சென்னை. | 100 00 |
| 10. | திரு. கே. முத்துசாமி அவர்கள், ஜெமினி காபி ஒர்க்ஸ், தாராபுரம். | 100 00 |
| 11. | திரு. அ. அண்ணுமலை முதலியார் அவர்கள், வரகூர் புதூர், கண்ணமங்கலம் போஸ்ட், வடார்க்காடு. | 100 00 |

| | | |
|---|---|---|
| 12. | திரு. என். கிருஷ்ண மூர்த்தி அவர்கள், தமிழாசிரியர், ஹிந்து தியலாஜிகல் உயர் நிலைப்பள்ளி, சென்னை. | 100 00 |
| 13. | திரு. கே. இ. அருணாசல முதலியார் அவர்கள், 7. வாசு தெரு, கீழ்ப்பாக்கம், சென்னை-10. | 100 00 |
| 14. | திரு கு. ஐயா. சுப்பிரமணிய முதலியார் அவர்கள், அறப்பொறுப்பு ஆட்சியாளர், ஸ்ரீ கபாலீசுரர் தேவஸ்தானம், மயிலை, சென்னை. | 50 00 |
| 15. | திரு. செ செல்வ பொன்னுரங்க முதலியார் அவர்கள், செந்நீர்க் குப்பம், பூவிருந்தவல்லி. | 50 00 |
| 16. | திரு. சி. சித்தரஞ்சன் தாஸ் அவர்கள், 28/340, பெரிய கடைத் தெரு, கோவை. | 50 00 |
| 17. | திரு. ஏ. கே. சுப்பிரமணிய சர்மா அவர்கள், ஆசிரியர், "ஆதாரக்கல்வி", சென்னை. | 40 00 |
| 18. | திரு. எஸ். சிவராம ஐயர் அவர்கள், Messrs. Simpson & Co., Madras. | 40 00 |
| 19. | திரு. பர்வதவர்த்தினி அம்மாள் அவர்கள், ஆசிரியர், சிந்தாதிரிப் பேட்டை, சென்னை. | 35 00 |
| 20. | திரு. சி. எஸ். இராமாமிர்தம் நாயுடு அவர்கள், பெஸ்ட் அன்கோ பிரைவேட் லிமிடெட், சென்னை. | 30 00 |
| 21. | திரு ஆர். மாசிலாமணி முதலியார் அவர்கள், Mayer & Co., Madras. | 30 00 |
| 22. | திரு. சி. கல்யாண சுந்தரம் செட்டியார் அவர்கள், சி. கல்யாணம் அன் கோ., 2. முத்து கிராமணி தெரு, பெரியமெட், சென்னை. | 30 00 |

23. திரு. திரிபுராந்தகம் அவர்கள், சிந்தாதிரிப் பேட்டை, சென்னை. 25 00

24. திரு. கு. சோமசுந்தரம் முதலியார் அவர்கள், ஜமீன்தார், ஈசன் கருணை, செங்கல்பட்டு. 25 00

25. திரு. டாக்டர் மு. வரதராசனுர். எம். ஏ., எம். ஓ. எல்., பிஎச். டி., அவர்கள், சென்னை. 20 00

26. திரு. ஏ. பொன்னுசாமி செட்டியார் அவர்கள், 6. இருளப்பன் தெரு, சென்னை. 20 00

27. திரு. எஸ். சினிவாசன் அவர்கள், தமிழ் ஆசிரியர், முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளி, சென்னை. 20 00

28. திரு. கே. ஆர். சம்பந்த முதலியார் அவர்கள், 33. வடமலை மேஸ்திரி தெரு, சென்னை. 20 00

29. திரு. எஸ் பாலகிருஷ்ண ஜோஷி, பி. ஏ., எல். டி., அவர்கள், தலைமை ஆசிரியர், ஹிந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளி, சென்னை. 20 00

30. திரு. டி. கே. பத்மநாப சர்மா, பி. ஏ., எல். டி., அவர்கள், ஷை பள்ளி., சென்னை. 20 00

31. திரு. எஸ். ஆர். கிருஷ்ண மூர்த்தி பி.எஸ்ஸி., பி.டி., அவர்கள், ஷை பள்ளி, சென்னை. 20 00

32. திரு. என் இராம மூர்த்தி, பி. ஏ., பி. டி., அவர்கள், ஷை பள்ளி, சென்னை. 20 00

33. திரு. இராம சுப்பிரமணிய முதலியார் அவர்கள், தமிழாசிரியர், ஷை பள்ளி, சென்னை. 20 00

| | | |
|---|---|---|
| 34. | திரு. டி. பி. சக்ரபாணி செட்டியார் அவர்கள், ஓவியப் புலவர், டை பள்ளி, சென்னை. | 20 00 |
| 35. | திரு. எம். குந்தன் பிரசாத் லால் அவர்கள், செயலாளர், வேதாந்த சங்கம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை. | 20 00 |
| 36. | திரு. பழனி ஆச்சாரி அவர்கள், பொன் வேலை, நாட்டு சுப்பராய முதலி சந்து, மயிலை. | 20 00 |
| 37. | திரு. டி. அங்கைய நாயுடு அவர்கள், திருவட்டீசுவரன் பேட்டை, சென்னை. | 20 00 |
| 38. | திரு. எம். எஸ். ஆதிகேசவலு நாயுடு அவர்கள், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை. | 20 00 |
| 39. | திரு. வெ. பொ. சோமசுந்தர முதலியார் அவர்கள், 105. கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை. | 20 00 |
| 40. | திரு. எஸ். வி. சுப்பையா செட்டியார் அவர்கள், 181. அண்ணு பிள்ளைத் தெரு, சென்னை. | 20 00 |
| 41. | திரு. கே. வீரராகவப் பிள்ளை அவர்கள், ஸ்ரீ விஜயலட்சுமி டெக்ஸ்டயல்ஸ், லக்மு தாஸ் தெரு, சென்னை. | 20 00 |
| 42. | திரு. டி. சுந்தரமூர்த்தி முதலியார் அவர்கள், 64. திருப்பள்ளித் தெரு, சென்னை. | 20 00 |
| 43. | திரு. ஜி. வைரக்கண்ணு செட்டியார் அவர்கள், Plot No. 25, First Main Road, New Colony, Crompet. | 20 00 |
| 44. | திரு. ஆர். மாரியப்பன் அவர்கள், வஸந்தா மில்ஸ், சிங்கநல்லூர், கோவை-5. | 20 00 |
| 45. | திரு. க. குழந்தைவேல் நாட்டார், பி. ஏ., அவர்கள், கூத்தப்பார், திருச்சி. | 20 00 |

| | | |
|---|---|---|
| 46. | திரு. புதுப்பட்டி. கி. நா. நடராஜன் செட்டியார் அவர்கள், 7/316. ஸ்டேஷன் ரோட், மீஞ்ஞான், மேல் பர்மா. | 20 00 |
| 47. | திரு. ராமாநுஜபுரம். S. பெருமாள் அவர்கள், மீஞ்ஞான், மேல் பர்மா. | 20 00 |
| 48. | திரு. ஜி. சுப்பிரமணிய ரெட்டியார் அவர்கள், வந்தவாசி. | 20 00 |
| 49. | திரு. ஆர். சுப்பராய ரெட்டியார் அவர்கள், பாதூர் கிராமம், வந்தவாசி. | 20 00 |
| 50. | திரு. வி. தணிகாசலம் செட்டியார் அவர்கள், திருவல்லிக்கேணி, சென்னை. | 20 00 |
| 51. | திரு. கு. வேங்கடசாமி நாயகர் அவர்கள், 30. கல்மண்டபம் ரோட்டு, இராயபுரம், சென்னை. | 10 00 |
| 52. | ஒரு ஹரிஜன நண்பர். | 10 00 |
| 53. | திரு. கூ. அ. சீனிவாச முதலியார் அவர்கள், கருப்பண்ண முதலி ஸ்டோர், சென்னை. | 10 00 |
| 54. | திரு. ப. நாகராஜன் அவர்கள், சங்கரன் பந்தல், மாயவரம் தா்லுக்கா. | 10 00 |
| 55. | திரு. P. V. இராமதாஸ் அவர்கள், 6. காளத்தீஸ்வரன் கோயில் தெரு, புதுச்சேரி. | 10 00 |
| 56. | திருமதி. பி. பெர்னண்டோ அம்மையார், எழும்பூர், சென்னை. | 10 00 |
| 57. | திரு. ம. சிங்காரவேலு முதலியார் அவர்கள், காரைக்கால். | 10 00 |
| 58. | திரு. தி. வெ. பாலகிருஷ்ணன், எம். ஏ., பி. எல்., அவர்கள், ஆள்வார் பேட்டை, சென்னை. | 10 00 |

# குரு வணக்கம்

வேதாந்தக் கடலிடைத் திளைக்கவும் வேதாந்த
வேட்கை யுடையோர்க் கெலாம்
வேதாந்தக் கடல்நீரை உப்புநீக் கித்தந்
துபகரிக்கவும் சென்னை நகரில்
வேதாந்த ஆசிரியன் எனவிளங் கிடவருளும்
வித்தகன் எங்கள் ஆசான்
வேதாந்த பாஸ்கரன் வடிவேலன் மலரடிகள்
என்முடிக் கணியா குமே.

# பஞ்ச கோச விவேகம்

## பஞ்ச கோச வாழ்க்கை

மனிதன் உடலில் வாழ்கின்றான்; உடலே தான் எனக் கொண்டு வாழ்கின்றான். நூல்கள் - அறிவு நூல்கள் - இவ்வுடலை ஐந்து பகுப்பாகப் பிரித்துப் பேசுகின்றன. அப் பகுப்புக்களுக்குப் பஞ்ச கோசங்கள் என்று பெயர் தந்து பேசுகின்றன. பஞ்ச கோசங்கள் என்னுந் தொடர் ஐந்து உறைகள் அல்லது ஐந்து மூடிகள் எனப் பொருள்படும். அப் பகுப்புக்கள் ஏன் உறைகள் எனப் பட்டன? அவைகள் உயிரை மறைத் திருத்தலின் உறைகள் எனப்பட்டன. அவை தனித்தனி உயிரை மறைத் திருப்பதைப் பின்னர் ஆராய்வாம். அவை ஒன்று சேர்ந்து உடல் என்று விளங்கும்போது உயிரை மறைத்திருப்பது தெற்றென விளங்கும். அதனை விளக்குவாம்.

ஒருவனை, "நீ யார்?" என்று வினவினால் அவன், "இதோ நான்" என்று தலை முதல் பாதம் வரை உள்ள உடலையே காட்டுகின்றான். "உடலா நீ? உடலுக்கு வேறாக நீ இல்லையா?" என்று வினவின், அவன், "உடல் நான் அன்று" என்று சொன்னாலும் 'இன்னது நான்' என்று சொல்லத் தெரியாமல் விழிக்கிறான். தலையணை உறை, தலையணையை மறைத்துக்கொண்டு, அதற்கு மேலே, தானே தலை யணையாகக் காணப்பட்டுக்கொண்டிருக்கிறது. அது போல உடல், உயிரை மறைத்துக் கொண்டு, அதற்கு மேலே தானே உயிராக விளங்குகின்றது. தலையணை உறை, தலையணையைக் கண்ணுக்குத் தெரியாமல் மறைக்கிறது. உடல், உயிரை அறிவுக்குத் தெரியாமல் மறைக்கிறது. அதனால் தான், ஒருவன் உடலை

நான் என்கின்றான். இதனால், உடல் உயிருக்கு உறை யாக இருக்கிறது என்பது விளங்கும்.

கடலை மாவு, சர்க்கரை, நெய் முதலியன ஒன்று சேர்ந்து லட்டு என்று விளங்குவது போல, ஐந்து கோசங் களும் ஒன்று சேர்ந்து உடல் என்று விளங்குகிறது. லட்டிலிருந்து கடலை மாவு முதலியவற்றைப் பிரித்து எடுத்து விட முடியாதாயினும், அறிவினால் அவற்றைப் பிரித்து அறியலாம். அவ்வாறே பஞ்ச கோசங்களையும் அறிவினால் பிரித்து அறிந்து பேசலாம். அன்ன மய கோசம், பிராண மய கோசம், மனோ மய கோசம், விஞ் ஞான மய கோசம், ஆனந்த மய கோசம், என்பன பஞ்ச கோசங்கள்.

## அன்ன மய கோசம்

அன்னம் உணவு. அன்னத்தினால், அன்ன சாரமாகிய சுக்கில சுரோணிதங்களால், வெண்கரு மூலம் செங்கரு மூலங்களால், இவ் வுடல் உண்டாகிறது. அன்னத்தினால் (உட்கொள்ளும் உணவால்) இவ் வுடல் நிலைத்திருக் கிறது. அன்னத்தில் - உணவு வடிவமான மண்ணில் - இவ் வுடல் மறைகிறது. அப்படிப்பட்ட இவ் வுடல் அன்ன மய கோசம் என்று சொல்லப்படுகிறது.

## பிராண மய கோசம்

பிராணனும் (வளியும்) கர்மேந்திரியங்களும் (தொழிற் கருவிகளும்) சேர்ந்தது பிராண மய கோசம். மூக்கில் போய்க்கொண்டும் வந்துகொண்டும் இருக்கும் காற்றே பிராணன் (வளி). பேசுதற் குரிய கருவி யாகிய வாக்கு (வாய்), நடப்பதற் குரிய கருவி யாகிய பாதம் (கால்), கொடுத்தல் வாங்கல் முதலியன செய்யும் கருவி யாகிய பாணி (கை), மல ஜலங்களை (கழிவுப் பொருள் களை) நீக்கும் கருவியாகிய பாயு (எருவாய்), ஆனந்திக்கும்

(இன்பம் துய்க்கும்) கருவியாகிய உபத்தம் (கருவாய்) ஆகிய இவ்வைந்தும் கர்மேந்திரியங்கள் (தொழிற் கருவிகள்) எனப்படும். பிராணனும் இவ்வைந்து தொழிற் கருவிகளும் சேர்ந்த கூட்டமே பிராண மய கோசம் என்று சொல்லப்படுகிறது.

## மனோ மய கோசம்

மனமும் ஞானேந்திரியங்களும் (அறி கருவிகளும்) சேர்ந்தது மனோ மய கோசம். நினைப்பதற்குரிய கருவி மனம். ஒலிகளைக் கேட்கும் காது, பொருள்களைக் காணும் கண், சுவையறியும் நாக்கு, மணம் அறியும் மூக்கு, தொட்டறியும் தோல் ஆகிய இவ்வைந்தும் அறியும் கருவிகளாதலின் ஞானேந்திரியங்கள் (அறி கருவிகள்) எனப்பட்டன. மனமும் இவ்வைந்து அறி கருவிகளும் சேர்ந்த கூட்டத்துக்கு மனோ மய கோசம் என்று பெயர்.

## விஞ்ஞான மய கோசம்

புத்தியும் முன் கூறிய அறி கருவிகள் ஐந்தும் சேர்ந்தது விஞ்ஞான மய கோசம். புத்தி ஆராயும் கருவி. அறி கருவிகளாகிய ஞானேந்திரியங்கள் முன் கூறப்பட்டவைகளே.

## ஆனந்த மய கோசம்

தொழிற் கருவிகளுக்கும், அறி கருவிகளுக்கும் தொடர்பின்றி அமைதி நிலவும் உள்ள நிலை ஆனந்த மய கோசம். இந் நிலை ஆனந்தமா யிருப்பதால் இஃது ஆனந்த மய கோசம் எனப்படுகிறது. நூல்களில் பிரியம், மோதம், பிரமோதம் என்னும் விருத்திகளோடு கூடியது ஆனந்த மய கோசம் என்று கூறப்படுகிறது. தான் விரும்பிய பொருளைப் பார்க்கும்போது உண்டாகும் உவகையே பிரிய விருத்தி. தான் விரும்பிய பொருளை அடைந்த போது உண்டாகும் மகிழ்ச்சியே மோத விருத்தி. தான் விரும்பிய பொருளை அனுபவிக்கும் போது உண்டாகும்

களிப்பே பிரமோத விருத்தி. எனவே இன்பத்தின் அளவு வேறுபாட்டால் அது பிரியம், மோதம், பிரமோதம் எனப் பிரிக்கப்பட்டது. மேலும் நூல்கள், சுழுத்தியில் (ஒன்று மறியாத உறக்கத்தில்) உள்ளது ஆனந்த மய கோசம் என்று கூறும். சுழுத்தியில் எல்லோருமே ஆனந்த மடைவதால், விளங்குதற்காக நூல்கள் அங்ஙனம் கூறு கின்றன. மனம் குவிந்த போதெல்லாம், விழிப்புக் காலத் திலும் கூட, ஆனந்த மயம் (இன்ப நிலை) இருக்கிறது என்பது ஒரு தலை. இதுவே ஆனந்த மய கோசம்,

## பஞ்ச கோச வாழ்க்கை

பஞ்ச கோசங்களும்கூடி ஒன்றாக விளங்கும் உடலில் மனிதன் வாழ்வது, ஐந்து நிலை வீட்டில் ஒருவன் வாழ்வது போன்றதாம். அவ் வீட்டில் ஒன்றன்மேல் ஒன்றாக ஐந்து நிலைகள் (அடுக்குகள்) இருக்கின்றன. உடலிலும் ஒன்றன்மே லொன்றாக ஐந்து கோசங்கள் இருக்கின்றன. ஈண்டு மேல் கீழ் என்பன, மேலிடம் கீழிடம் என்னும் பொருளில் அல்ல; மற்றோ, மேல்தரம் கீழ்த்தரம் என்னும் பொருளிலாம்.

அடியில், கீழே இருக்கும் முதல் நிலை அன்ன மய கோசம். அதற்கு மேலிருக்கும் இரண்டாம் நிலை பிராண மய கோசம். மூன்றாம் நிலை மனோ மய கோசம். நான் காம் நிலை விஞ்ஞான மய கோசம். ஐந்தாம் நிலை ஆனந்த மய கோசம்.

ஐந்து நிலை வீட்டில், முதல் நிலையில், அறிவு குறைந் தவர்களும் ஏழைகளும் வசிக்கின்றனர். அவர்களுக்குச் சுகம் குறைவு; கஷ்டம் அதிகம். அங்கே காற்றும் வெளிச் சமும் நுழையா; நோயும், வறுமையும், துன்பமும் நுழை யும்; மூட்டைப் பூச்சி, கொசு, எறும்பு, கரப்பான் முதலிய வற்றின் தொந்தரை அதிகம். அங்கு வசிப்பவர்களுக்கு உண்ணவும் உறங்கவும் மாத்திரம் இடம் வேண்டும்.

அவர்கள் இத்தனை உபத்திரவங்களுக் கிடையில் உண்டு உறங்கி விடுவார்கள்.

இரண்டாம் நிலையில், சிறிது அதிக வருமானம் உடையவர்கள் வசிக்கின்றனர். அங்கே சிறிது காற்றும் வெளிச்சமும் புகும். அவர்களுக்கு வேலைக்காரர் உண்டு; ஓய்வும் உண்டு. சொக்கட்டான், கேரம் முதலியன அவர்கள் விளையாடுவர்; கிராமபோன் பாட்டுக் கேட்பர். அவர்களுக்கு நோய், கஷ்டம் முதலியவை குறைவு.

மூன்றும் நிலையில், இன்னும் அதிக வருமானம் உடையவர் வசிக்கின்றனர். அவர்களுக்கு அறிவு பெறும் வசதி, இன்பம் முதலியவை இன்னும் அதிகம்.

நான்காம் நிலையில், வருமானம் முதலியவற்றால் இன்னும் உயர்ந்தவரே வசிக்கின்றனர்.

ஐந்தாம் நிலையில் வசிப்பவரோ ஆகாயத்திலேயே வசிக்கின்றனர் எனலாம். கந்தருவர் என்னும் தேவர் இசை வல்லார், ஆகாய சஞ்சாரிகள், அதிக இன்பமுடையார் என நூல்களில் படிக்கின்றோம். இவ்வைந்தாம் நிலையில் வசிப்பவர்களைக் கந்தருவர்கள் போல் சவுகரியமும் இன்பமும் அனுபவிப்பவர் எனலாம். மழை, பனி இருப்பின் அறைகளின் உள் அவர் வதிவர். வெயிற் காலத்தில், பகலில், அதிக காற்று அவர்களுக்குத் தான் கிடைக்கும். இரவில் புழுக்கமாயிருந்தால் திறந்த வெளியில் அவர்கள் படுக்கலாம்; மின்சார விசிறியின் கீழும் படுக்கலாம்; விரும்பியவாறு வெப்ப தட்பங்களை அமைக்கும் அறைகளை (air-conditioned room) வேண்டுமாயினும் தம்முடைய பெரும் பணத்தால் ஏற்படுத்திக் கொள்ளலாம். சுற்றுப்புறமெங்கும் குளிரால் நடுங்கும்போது, அவ்வறையில் வேண்டும் வெப்பத்தைப் பெற்றுச் சுகமாயிருக்கலாம்; சுற்றுப்புறமெங்கும் கதிரவன் கடுமையால் கருகும்போது, வேண்டும் குளிர்ச்சியைப் பெற்று இன்பமாயிருக்கலாம்; காலை மாலைகளில்

கதிரவன் உதய அஸ்தமனங்களின் அழகிய காட்சி களைக் கண்டு மகிழலாம்; இரவில் நட்சத்திரங்கள் நிறைந்த வான வெளியில் கண்ணையும் மனத்தையும் செலுத்தி இன்ப உலகில் ஏறலாம். வேறென்ன கூறல் வேண்டும்? வான சாஸ்திரம் பயிலும் வசதியும் அவர்கட் குண்டு. அவ் வுயரிய இடத்திலிருந்து சுற்றுப்புறக் காட்சி களை யெல்லாம் காணலாம். அவர்கள் அடையும் இன்பம் பெரிது; பெரிது.

ஒருவன், "நான் சென்னையில், தங்கசாலைத் தெருவில் 144-ஆம் எண்ணுள்ள வீட்டில் வசிக்கிறேன்" என்று கூறின், கேட்பவர் அவன் அவ் வீட்டில் வசிப்பதாக அறிகின்றனர். அன்றி, அவன் அவ் வீட்டில், எந்த நிலை யில் - எத்தனையாவது அடுக்கில் - வசிக்கின்முன் என்பதை அவர் அறியார். அவனிடம் நெருங்கிப் பழகுபவர்களும், அவன் வீட்டுக்குச் செல்பவர்களும் மாத்திரம் அவன் அவ் வீட்டில் எந்த நிலையில் வசிக்கிருன் என்பதையும், அவன் எத்தகையவன் என்பதையும் அறிவர்.

அங்ஙனமே, மனிதன் ஓர் உடலில் வாழ்கின்முன் என்பது யாவரும் அறிந்ததேயாம்! பஞ்ச கோசமும் சேர்ந்து ஒன்றாக விளங்கும் அவ் வுடலில் எந்தக் கோசத் தில் வாழ்கிருன் என்பதை எளிதில் அறிய முடியாது. ஒருவனது வாழ்க்கை எந்தக் கோசத்தில் நடக்கிறது என் பது ஆராய்ச்சியினாலேயே அறிதற்கு உரியது. பஞ்ச கோசங்களில் ஒவ்வொன்றிலும் மனிதன் வாழ்வு நிகழ் கின்றது. கோசங்கள் ஒன்றைவிட ஒன்று உயர்ந்ததா யிருக்கும். ஒரு கோசத்தில் வாழ்வதைவிட இன்னொன் றில் வாழ்வது உயர்ந்தது. ஒருவனுடைய உயர்வு தாழ்வு அவன் எந்தக் கோசத்தில் வாழ்கின்முன் என்பதைப் பொறுத்திருக்கின்றது. இதனை அறிந்து அவ் வறிவைப் பயன் படுத்திக் கொள்வதால் மக்கள் உயர் நிலை பெற்று அதிக இன்பத்தைப் பெறுதல் முடியும்.

## அன்ன மய கோச வாழ்க்கை

ஏழை ஏழ்மையால் - பொருள் குறைவால் - ஐந்து நிலை வீட்டில் முதல் நிலையில் வசிப்பதுபோல, மனிதன் மன வளர்ச்சிக் குறைவால் - அறிவின்மையால் - அன்ன மய கோசத்தில் மாத்திரம் வாழ்க்கை நடத்துகிறான். ஈண்டு ஏழ்மை என்னும் சொல் பொருளின்மை, அறிவின்மை என்னும் இரண்டு பொருளையும் தருவது அறிந்து மகிழ்தற் குரியது. வாழ்க்கைக்குப் பொருட் செல்வமும் வேண்டும்; அறிவுச் செல்வமும் வேண்டும். பொருட் செல்வம் இன்றேனும் மிக்க கேடு இல்லை. அறிவுச் செல்வந்தான் அவசியம் வேண்டும். இதனை வற்புறுத்தவே பொய்யில் புலவர்:

> அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
> என்னுடைய ரேனு மிலர்.

என்று கூறினர். ஏழை அவ் வீட்டில் மேல் நிலைகளுக்குப் போக அனுமதிக்கப்படுவ தில்லை; போக விரும்புவதும் இல்லை. அன்ன மய கோசத்தில் வாழ்பவர் (bodily men, physical men) மேல் நிலை அடையார்; மேல் நிலை அடைய வேண்டும் என்னும் எண்ணமும் அவர்களுக்கு உண்டாவ தில்லை. அவர்கள் அவ்வளவு தாழ்ந்தவர்கள்.

அவர்களுக்கு உணவும் உறக்கமும் சாலும். உணவிலும் வகை வகையாக உருசி பார்த்து அவர் சாப்பிடார்; எதையாவது வயிறு நிறையச் சாப்பிடுவர்; உணவு கிடைக்கும் வரையில் உழல்வர்; உண்டால் உறங்கி விடுவர்; கரடு முரடான இடங்களிலும், சாய்க்கடை ஓரங்களிலும்கூடப் படுத்து உறங்கிவிடுவர். மூட்டைப் பூச்சியும் கொசுவும் அவர்களை ஒன்றும் செய்யா. அவை கடிக்கும். ஆனால் அக் கடிகளை அவர் உணரார். இடி விழுந்தாலும் காது கேளாமல் குறட்டைவிட்டு உறங்குவர். இதை யறிந்த மற்றவர் அவர்களுக்கு அரை வயிறு

முக்கால் வயிறு உணவு கொடுத்து அவர்களிடம் நாள் முழுதும் - பத்து மணி நேரம் - வேலை வாங்கி விடுவர். அவர்களில் சிலர் இந்த உணவுக்கு இவ் வளவு உழைப்பா என்று நினைத்து ஐய மேற்று உண்டே வாழ்நாளைக் கழித்து விடுவர். அவர்களால் மற்றவர்க்கு நன்மை சிறிது உண்டு; தீமையே இல்லை.

இருபது வருடங்களுக்கு முன் அக்காகாரன் என்ற ஒருவன் இருந்தான்; மகளிரை எல்லாம் அக்கா என்று அழைப்பாளுதலின் அப் பெயர் பெற்றான்; அக்கா சிறிது அன்னம் (பழையது) இட்டு, இயந்திரத்தில் மா வரைப்பது முதலிய வேலைகளைக் கொடுத்தால் உட்காந்துகொண்டே அரைத்து முடிப்பான். வேறு எந்த வேலையும் அவன் செய்த தில்லை. வேறு வேலைகள் கஷ்டமானவை. உட்காந்துகொண்டே அரைப்பது சுலபம். இஃது அவன் வாழ்க்கை. இவனால் சிறிது நன்மை உண் டல்லவா?

இந்த அன்ன மய கோச வாழ்க்கை உடையவர் உடலால் மாத்திரம் வாழ்கின்றனர். அதாவது உடலுக்குத் தேவையாய் இருப்பனவற்றை மாத்திரம் பெறுவது அவர்கள் வாழ்க்கையாக முடிகிறது. உடலுக்கு வேண்டியவை உணவும் உறக்கமும். அவர்கள் உழைத்தாவது பிச்சை எடுத்தாவது உணவு உண்ட பிறகு உறங்கிவிடுவர். பாலின்பத்தை விரும்புவதுகூட அவர்களிடம் இராது. சினிமா முதலிய வேடிக்கை பார்ப்பதையும் விரும்பார். அவர்களுக்கு ஆசை கோபம் முதலிய மன எழுச்சிகள் மிக மிகக் குறைவு. அவர்கள் உடலின் உள், வெளி, உடை, உறையுள் முதலியன தூய்மையா யிருக்கவேண்டுமென்றும் கருதார். ஆதலின் அசுத்தத்தால் வரும் அம்மை, வாந்திபேதி முதலியன அவர்களை எளிதில் பற்றும். அம்மை முதலியவற்றால் அகால மரணம் அடையாமலும், சோற்றுக்குப் பஞ்ச மில்லாமலும் வாழ்ந்தால் அவர்கள் நூற்றாண்டு வாழினும் வாழ்வர்.

அவர்களை மிருக வாழ்க்கையினர் என்றுகூடச் சொல்ல முடியாது. கல் வாழ்க்கையினர், மர வாழ்க்கையினர் என்று சொல்லலாம். பன்றி வாழ்க்கையினர் எனினும் பொருந்தும். அதாவது, மன உணர்ச்சி குறைந்த வாழ்க்கையினர் அவர்கள் என்க.

ஆ! சோம்பேறி வாழ்க்கை! உண்பது தவிர வேறு நோக்கம் இல்லாத வாழ்க்கை! தமோ குணவாழ்க்கை! இது தான் அன்னமய கோச வாழ்க்கை! இந்த வாழ்க்கை வாழ்ந் தால் போதுமா? நன்ரு? சிறப்பா? சிந்திக்க.

## பிராண மய கோச வாழ்க்கை

சிறிது பொருள் உடையவர், ஐந்து நிலை வீட்டில் இரண்டாம் நிலையில் வசிப்பது போல, மனிதன் சிறிது மன வளர்ச்சியால், மானம் (பெருமை) பாராட்டுபவனுகி, பிராண மய கோசத்தில் வாழ்கின்ருன். அவனுக்குச் சோம் பேறி வாழ்க்கை பிடிப்ப தில்லை. அவன் பிறரிடம் இரந்து வாழான். ஔவையார் நீதி வாக்கியங்களைப் படிக்காவிட் டாலும், "ஏற்பது இகழ்ச்சி" என்பதை அவன் உணர் கின்ருன். வள்ளுவர் தந்த திருமறையை ஓதாமலும், "பசுவுக்குத் தண்ணீர் கொடுங்கள் என்ருவது பிறரைக் கேட்பது இழிவுதான்" என்பது அவன் கருத்தாக அமை கின்றது. பாடுபட்டு வயிறு வளர்க்கின்ருன். உழைக் கின்ற அவன் உடல் உரம் பெறுகின்றது. உரம் பெற்ற உடலில் உள்ள அவன் பிராணனும் வலிமை பெறுகின் றது. அவனுக்கு, "முயற்சி திருவினை யாக்கும்"—முயற்சி தான் செல்வத்துக்குக் காரணம்—[illegible] பொருள்களைப் பெறலாம் என்பது [illegible] விளங்கு கிறது. அவன், உடல் முயற்சியையே [illegible] கொள்கின்ருனுதலின், ஒருவாறு [illegible] ரும். மன முயற்சி உண்டென அறி[illegible] யிற் கல்வி பயிலாத அவன், உடல் உழைப்பினுலேயே வாழ்கின்ருன்.

KOVILOOR MADALA[illegible] KOVILOOR - 630 3[illegible] (NEAR) KARAIKUD[illegible] PHONE [illegible]

பிராண மய கோசத்தில் வாழ்பவர், உழைப்பாளிகள், உழவர் (labourers) உலகத்துக்கு ஆதாரமாக இருக்கின்றனர். "உழுவார் உலகத்தார்க் காணி" என்பர் வள்ளுவர். உழவு என்பது வருத்தம், கஷ்டம், உடலுழைப்பு என்னும் பொருளதாதலின், உழவுத் தொழில் செய்பவரையே யன்றி, உழைப்பாளிகள் அனைவரையுமே உழவர் என்று கொள்ளலாம். பயிர்த்தொழில் செய்பவர் காலையிலிருந்து மாலைவரை உழைப்பதையும், ஆலைகளில் வேலை செய்வோர் காலை ஆறு மணிக்குத் தொழிலுக்குச் சென்று, மாலை ஐந்து மணிக்கு வெளி வருவதையும், நாம் காண்கின்றோம். அவர்கள் உழைப்பும், வெறும் உழைப்பு, திறமை பெற்ற உழைப்பு (skilled labour) என்று இருவகைப்படும். வெறும் உழைப்பாளிகள் - தங்கள் உழைப்பில் மனதைச் செலுத்தித் திறமை அடையாதவர்கள் - நாளொன்றுக்கு எட்டணா, பன்னிரண்டணா, ஒரு ரூபாய் கூலி பெறுகிறார்கள். திறமை பெற்ற உழைப்பாளிகள் நாளொன்றுக்கு ஐந்து ரூபாய் முதல் இருபது ரூபாய் வரை கூலி பெறுகின்றனர். மாதம் அறுநூறு ரூபாய் பெறினும் உழைப்பாளி உழைப்பாளிதான். அவர்களிற் பெரும்பான்மையோர், அதிகமாகத் தாம் பெறும் பணத்தைக் குடிக்கும், கூத்திக்கும் கொடுத்து இழந்துவிடுகின்றனர். பகல் முழுவதும் உழைக்கின்றனர். மன வளர்ச்சி யில்லாதவர்களாகிய அவர்களுக்குக் கிடைக்கும் சிறிது நேரத்தில் அவர்களை மகிழ்விக்க வல்லன அவ் விரண்டுமே போலும்!

பணக்காரரும், அறிவால் உலகை ஏய்ப்பவரும், பணக்காரர் சார்பில் நடக்கும் எல்லா அரசும் சமீப காலம் வரை உழைப்பாளிகட்குத் தம் கடமையைச் செய்ய வில்லை. இப்போது சில அரசுகள் அக் கடமையைச் செய்ய முனைந்திருக்கின்றன. உழைப்பாளி நாள் முழுதும் உழைக்கிறான். அவனுக்கு அரை வயிறே கஞ்சி. பணக்காரன் உடலுழைப்புச் சிறிது மின்றி, விருந்துண்டு களிக்கின்

ருன். நில வரி எவ்வளவு உயர்ந்தாலும் கேட்பாரில்லை. விற்பனை வரி - ஒரு ரூபாய்க்குத் தம்படி வரி - போட்டால் உடனே கூக்குரல்.

உழைப்பாளிகள் உழைக்கவும், உண்ணவும், உறங்கவுமே நேரம் பெறுகின்றனர். நேரம் கிடைத்தாலும் இம் மூன்றைத் தவிர வேறொன்றும் செய்ய அவர்கள் அறியார். அவர்கள் மேல் நிலை அடைய மற்றவர் உதவுதல் வேண்டும். அன்ன மய கோச வாழ்க்கையினர் கல்லும் மரமும் போல் வாழ்கின்றனர் எனின், இப் பிராண மய கோச வாழ்க்கையினர் மிருகமும் பறவையும் போல் வாழ்கின்றனர். அவர்களுக்குப் படிப்பு வேண்டாவோ? விளையாட்டு வேண்டாவோ? மற்றவர்களோடு கலந்து, உறவாடி, நட்புச் செய்து, மனிதப் பண்பை வளர்க்க நேரம் வேண்டாவோ? ஆண்டவனை நினைந் துருகிப் பக்தி செய்ய வசதி வேண்டாவோ? உழைப்பாளிகட்கு இவை யனைத்தையும் வழங்குவதற்காகத்தான், நம் முன்னோர் உற்சவம் என்னும் திருவிழாக்களை ஏற்படுத்தினர். அத் திருவிழாக்கள் எல்லாம், அந்தந்த ஊரில் உழவர்க்கு வேலை யில்லாத காலத்திலேயே இன்றளவும் நடைபெற்று வருகின்றன என்பது ஆராய்ந் தறிதற் குரியது. இரதோற்சவம் (தேர்த் திருவிழா) உழவன் வராமல் நடக்குமா? வணிகரும், அரசரும், அந்தணரும் மாத்திரம் இழுத்துத் தேர் நிலைக்குச் சென்ற துண்டா? காந்தியடிகள் பிறப்பதற்கு முன்னேயே, தேர்த் திருவிழாவில் மாத்திரம் தீண்டாமை ஒழிக்கப்பட்டது.

உழைப்பின் பெருமையே பெருமை! உலகத்தைத் தாங்கும் பெருமை, நோயில்லாத வாழ்வைத் தரும் பெருமை, நீண்ட வாழ்நாளைத் தரும் பெருமை, கெட்ட எண்ணங்களுக்கு இடங் கொடாத பெருமை, பகைவரை எதிர்த்துப் புறங் காணும் பெருமை - இன்னோரன்ன பெருமை யாவும் உழைப்பின் பெருமையே.

வணிகர், அரசர், அந்தணர் இவர்களுக்கு ஆகார நியமம் (உணவுக் கட்டுப்பாடு), சந்தியா வந்தனம், பிராணுயாமம் முதலியவற்றை வற்புறுத்திக் கூறும் அற நூல்கள் உழவர்க்கு ஒன்றும் கூற வில்லை. உழைப்பாளிகள் நரகத்திற்குப் போகட்டும் என்னும் எண்ணமா? அன்று! அன்று!! உணவுக் கட்டுப்பாடு இன்றேல், அம்முப் பகுதியினரும் நோயுறுவர். உழைப்பாளி எதையுண்டாலும், தன் உழைப்பினுல் சீரணித்துக்கொள்வான்; நோயுருன்; நீண்ட நாள் வாழ்வான். பிராணனும் கர்மேந்திரியங்களும் சேர்ந்தது பிராண மய கோசம் ஆதலின், கர்மேந்திரியங்களை - கை, கால் முதலிய தொழிற் கருவிகளைத் - தொழிற்படுத்தும் உழைப்பாளிக்குக் கர்மேந்திரியங்களின் கூட்டமாகிய உடல், வலிமை பெறுவதோடு அவற்றின் சம்பந்த முள்ள பிராணனும் வலிமை பெறுகின்றது. அசீரணமும், அதன் காரணமாகப் பல நோயும் அடைந் துழலும் மக்கள் கவனிப்பார்களாக! உழையுங்கள்! அசீரண மில்லை; மலச் சிக்க லில்லை; இவற்ருலுண்டாம் பல பிணிகளு மில்லை. உழைக்கவும் விருப்ப மில்லை; ஆகார நியமம் முதலியவற்றைக் கடைப்பிடிக்கவும் விருப்ப மில்லை எனில், நன்று! பிணி யுறுங்கள்! விரைந்து இறந்தொழியுங்கள்! உங்களை வைத்தியர் காப்பாற்ற முடியாது என்ப துறுதி.

சந்தியா வந்தனம் செய்பவர் சூரியனை வணங்குகின்றனர். உழைப்பாளி மந்திர மில்லாமலே சூரியனை வணங்குகின்ருன்; சூரியனுக்கு - சூரிய உஷ்ணத்துக்கும், சூரிய ஒளிக்கும் - தன் உடலை அர்ப்பணம் செய்கின்ருன்; மழையை வாழ்த்துகின்ருன்; பசுவைப் பூசிக்கின்ருன். சந்தியாவந்தனம் செய்வோர், "எல்லா மக்களும் சுகமாயிருக்க!" என்று நல் லெண்ணத்தோடு வாழ்த்துகின்றனர். அப் பொருளுடைய மந்திரத்தையாவது வாயாற் கூறுகின்றனர். உழைப்பாளி, தன் னுழைப்பினுல் உணவு, உடை, உறையுள் முதலியவற்றை மக்களுக்கு வழங்கி, எல்லா மக்களும் சுகமா யிருக்கச் செய்கின்ருன்.

பிராணுயாமம் (மூச் சடக்குதல்) இருதயத்தையும் இரத்தத்தையும் சுத்தம் செய்வதன் மூலம் உடலைச் சுத்தம் செய்கின்றது; மனத்தையும் உடலையும் உறுதிப்படுத்துகின்றது. இதனை, மற்றவர் கொள்க! உழைப்பாளிக்கு இது வேண்டா. அவன் உழைப்பினுல் வரும் வியர்வை நீர், அவன் உடலைச் சுத்தம் செய்கின்றது. உழுதும், மூட்டை தூக்கியும், வண்டி யிழுத்தும் நாள் முழுதும் மூச்சுப் பிடிக்கும் அவன், ஒரு நாளில் மூன்று முறை மாத்திரம் மூச்சுப் பிடிப்பதாகிய பிராணுயாமம் செய்ய வேண்டுமா? உழைப்பாளிக்கு உண்ணவும் உறங்கவும் நேரம் கிடைக்கவில்லை எனில், நினைக்க நேரம் ஏது? நினைக்கவே நேர மில்லை எனில், அவன் மனத்தில் கெட்ட எண்ணங்கள் எங்ஙனம் எழும்? சோம்பேறி – உழைப்பில்லாதவன் - மனத்தி லன்றோ கெட்ட எண்ணங்கள் எழும்? Idle man's brain is the devil's workshop. 'சோம்பேறியின் மனம், பேய்க்கு வேலைக் களம்' என்று ஆங்கிலப் பழமொழி கூறுகின்றது. ஆகவே, உழைப்பாளிக்குப் பிராணுயாம மின்றியே - உழைப்பினுலேயே - உடலும் மனமும் சுத்தமாகின்றன என்க.

எல்லாம் சரி! உழைப்பாளி உலகத்தைத் தாங்குபவனுயினும், அவன் வாழ்க்கை உழைப்பதும், உண்பதும், உறங்குவதும் தவிர வேறென்றுமில்லாத மிருக வாழ்க்கை தான்! தமோ குணமும் சிறிது ரசோ குணமும் கலந்த வாழ்க்கை அவன் வாழ்க்கை. அவன் வாழ்க்கையில் பாவமு மில்லை. 'பிறர்க்கு நன்மை செய்கின்றேன்' என்று எண்ணிச் செய்யாமையின், புண்ணியமு மில்லை. அரிதினும் அரிதாகிய மனிதப் பிறவியை மிருக வாழ்க்கை வாழ்ந்து போக்கிவிடலாமா? அவன் மனப் பண்பை வளர்க்க - கற்பதற்கும், கேட்பதற்கும், கடவுளை நினைப்பதற்கும் - சிறிது நேரம் பெறுதல் வேண்டும். பணக்காரரும், அரசியலாரும் அவன் மனப் பண்பை வளர்க்க, நேரமும் வசதியும் கொடுத்து உதவுவார்களாக!

## மனோ மய கோச வாழ்க்கை

ஐந்து நிலை வீட்டில் மூன்றும் நிலையில் வசிப்பவர்க்கு என்ன குறைவு உண்டு? அவர்களுக்குப் பொருளாலும் வேறு வசதிகளாலும் யாதொரு குறைவு மில்லை. ஆனால், அவர்களும் தங்கள் புத்திக் குறைவால் அவ் வசதிகளை நன்கு பயன்படுத்தாமல், தவருகப் பயன்படுத்தி அல்லல் அடையலாம். அதுபோல, மனோ மய கோசத்தில் வாழ் பவர் மனித வாழ்க்கைக்கு வேண்டும் வசதி பெற்றவ ராவர். அவ் வசதி யாது எனின், அவர்கள் நினைக்கும் ஆற்றலும், நினைப்பதற்கு நேரமும் உடையவர்களாக இருக்கின்றனர் என்பது. அவ் வசதிகளை அவர்கள் நன்கு பயன்படுத்தி உயர் வடையலாம் அல்லது தவருகப் பயன் படுத்தித் தாழ்வு அடையலாம். உடலில், மனோ மய கோசத்தில் வசிப்பவர், பிராண மய கோசத்தில் வசிப்பவரைவிட அதிக மன வளர்ச்சி யுடையவர். மனித வாழ்க்கை வாழும் வசதி அவர்க்குத்தான் கிடைத்துளது. மனிதன் என்ற சொல் மனம் என்ற சொல்லினின்று பிறந்தது. மனம் நினைக் கும் கருவி. மனிதன் மனத்தால் நினைத்துக் காரியங்களைச் செய்து வாழ்பவன். அன்ன மய கோசத்தில் வாழ்பவ ருக்கு, உண்பதையும், உறங்குவதையும் பிரதானமாகக் கொண்டவர்க்கு, நினைக்கும் ஆற்றலே இல்லை. பிராண மய கோசத்தில் வாழ்பவருக்கு, உழைப்பாளிகளுக்கு, நினைக்க நேர மில்லை. மனோ மய கோசத்தில் வாழ்பவ ருக்கு நினைக்கும் ஆற்றல்உண்டு ; நினைக்க நேரமு முண்டு. நினைக்கிறபடியால் அவர்தாம் மனிதர். அவர்தாம் ஆசை கோபங்களை உடையவர். அன்ன மய, பிராண மய கோசங்களில் வாழ்பவருக்கு மன வளர்ச்சிக்கே வழி யில்லை யாதலின், உயர்வு அடைதல் என்பது இல்லை. மனோ மய கோசத்தில் வாழ்பவருக்கு மன வளர்ச்சி உண்டு.

மனோ மய கோசத்தில் வாழ்பவர் (emotional men) உயர் வடைய வழி யுண்டு ; தாழ் வடையவும் வழி யுண்டு. இவர்கள் அடையும் உயர்வுதான் சுவர்க்கம். இவர்கள்

அடையும் தாழ்வுதான் நரகம். சுவர்க்கம் மேலே இருப்ப தன்று; நரகம் கீழே இருப்ப தன்று. சுவர்க்கம் இன்பந் தருவது; நரகம் துனபந் தருவது. பூமியில் ஓர் இடமே நல்லவர்க்கு இன்பந் தரும்; தீயவர்க்குத் துன்பந் தரும்.

மனோ மய கோச வாழ்க்கை, தொடக்கத்தில் - அன்பு வாழ்க்கை ஆசை வாழ்க்கை என இரண்டாகப் பிரி கிறது. அன்பு வாழ்க்கை, அருள் வாழ்க்கையாக மாறி, தனக்கென வாழாது பிறர்க்கென முயலும் அற வாழ்க்கை யாக - மகாத்மாக்கள் வாழ்க்கையாக - முடிகிறது. ஆசை வாழ்க்கை வன்பு வாழ்க்கையாக மாறி, தனக்கென வாழும் மற வாழ்க்கையாக - துராத்மாக்கள் - கயவர் - வாழ்க்கை யாக முடிகிறது. நூல்களில் கூறப்படும் காமக் குரோத லோப மோக மத மாற்சரியங்களென்னும் கெட்ட குணங் களும், அவற்றிற் கெதிரிடைக ளாகிய அன்பு, பொறுமை, ஈகை, தெளிவு, அடக்கம், இரக்கம் முதலிய நல்ல குணங் களும், மனோ மய கோசத்தில் வாழ்பவர்க்கே உண்டு. மனோ மய கோசத்தில் வாழ்பவர் அடையும் மேன்மே லுயர்வுகளைத்தான் பூ, புவர், சுவர், மகர், ஜன, தப, சத்திய லோக மெனப் புராணங்கள் வருணிக்கின்றன. அவர்கள் அடையும் கீழ்க் கீழ் இழிந்த (முடிவில் துன்ப மாக முடிகிற) கீழ் நிலைகளைத்தான் அதல, விதல, சுதல, தராதல, மஹாதல, ரசாதல, பாதாளமென அப் புராணங் கள் கூறும்.

அன்பு நெறியில் வாழ்பவன் மனம், எளிதில் அமைதி யுறும். சில சமயங்களில் அவன் கஷ்டப்பட நேர்ந்தாலும், தான் முன் பிறவியில் செய்த தீவினையின் பயனாக, அக் கஷ்டம் தான் திருந்துவதற்காகக் கடவுளால் ஏற்பட்ட தென்று எண்ணி மனம் அமைவான்.

அன்பினால் மனம் அமைந்த அவன் மனத்திலும் எரிய மாட்டான்; அவன் உடம்பும் எரியாது. இவ் விரண்டு எரிதலும் இல்லாமையால் அவன் இரத்தம் கொதிப்

படைவ தில்லை; இரத்தம் கெடுவ தில்லை; கொடிய நோய்கள் அவனுக்கு வரமாட்டா. தேவாமிர்தம் ஒன்று இருந்தால் இருக்க! இன்றேல் ஒழிக! தேவ ருலகத்தில் உள்ள அது மனிதர்க்குப் பயன் படுமாறு உளதோ? இல்லை. மனிதர்க்குப் பயன் படும் அமுதம் அன்பே. அன்பு நெறியே அமுத நெறி. அன்பு நெறியில் வாழ்பவன் அமைந்த மனம் உடையவனாய், நோயற்று, நீண்ட நாள் வாழ்வன். அவன் தனக்குக் கிடைத்ததைப் பிறர்க்குப் பகிர்ந் துண்பன்; தருமவான் எனப் பெயர் பெறுவன். எல்லாரும் அவனை விரும்புவர்.

ஆசை நெறியில் வாழ்பவன், பேராசை யுடையவனாய் ஆய்விடுவான். எல்லாம் அவனுக்கே வேண்டும். அவன் நியாய முணரான். அவன் அரசியல் சட்டங்களுக்கு அடங்கியும், அயலி லுள்ள மக்கள் பழக்க வழக்கங்களுக்கு விரோதப் படாமலும் வாழும்வரை அதிகமாகத் தீங்கு அடையான். வெளிப்படையாக அவன் சட்டம் முதலியவற்றை மீறின் தண்டனை யடைந்து துன்புறுவான். இரகசியமாக மீறினும் இவ் வுலகத்திலேயே கடவுள் தண்டனையை - இயற்கைத் தண்டனையை - துன்பத்தை அவன் அடைந்து விடுவான். அரசாங்க சட்டங்கள் அளிக்கும் தண்டனையை விட, இயற்கைச் சட்டம் அளிக்கும் தண்டனை மிக மிகக் கொடுமையானது.

சிறிது விளக்குவாம்: ஆசை மனிதன் ஆசைப் படுகின்றான்; ஆசை நிறைய வில்லை; ஆசைப் படுகிறான்; இரவு தூக்கம் இல்லை; மனம் எரிகிறது. உடம்பும் எரிகிறது. அத் தருணம் உஷ்ணமானியை (thermometer) வைத்து அளந்தால் 101, 102 டிகிரி (சுரம்போல்) காணப்படும். இதனால் இரத்தம் கொதிப்படைகிறது; மறுநாள் சுரமோ, ஜன்னியோ உண்டாயினும் உண்டாகும். மற்றொரு நாள் அவன் தன் விருப்பத்திற்குத் தடையாய் நிற்கும் ஒருவன் மேல் கோப மடைகிறான். அவனைக் கொல்லவும் இஷ்டந்தான். கொன்று விட முடியுமா?

மனம் எரிகிறது; உடம்பு எரிகிறது; இரத்தம் கொதிப் படைகிறது. மறு நாள் கடுமையான சீத பேதி உண்டாவது ஆச்சரியம் அன்று. அவன் மனத்தில் சிறிது மனவெழுச்சி(emotion) உண்டானால் அஃது இரத்தக் கொதிப்புவரை செல்லுகிறது. அவன் வாழ்க்கையில் எத்தனை முறை இவ்வாறு இரத்தக் கொதிப்பு உண்டாகி இருக்கும்? உலகம் அறிய வேண்டாம்; சட்டம் அறிந்து தண்டிக்க வேண்டாம்; கொலை செய்தால் சட்டம் தண்டிக்கும்; கொன்று விடட்டுமா என்று நினைத்து மனம் எரிந்தால் சட்டம் தண்டிக்காது. ஆனால், எல்லாம் கடவுள் அறிவார்; இயற்கை அறியும். சட்டத்திற்கு ஒளியலாம்; இயற்கைச் சட்டத்திற்கு ஒளிய முடியாது. அடிக்கடி உடல் எரிய, மனம் எரிய, இரத்தமும் கொதிப் படைந்தால், இரத்தம் கெடும். இரத்தக் கெடுதல்தான் மேகம் (venereal disease), மூலம், இராச கட்டி முதலிய கொடிய நோய்களாக மாறுகின்றது.

இந்த நோய்களை அடைவதற்கு ஒருவன் பாபங்களைச் செய்ய வேண்டு மென்ப தில்லை. பாபங்களை அடிக்கடி நினைத்தால் போதும். காமம் மேகமாம்; கோபம் இரத்தக் கடுப்பு முதலியவையாம். லோபமும், அகங்காரமும் வாத ரோகங்களாகவும் கட்டிகளாகவும் மாறும். இவ்வுண்மைகளை அந்தந்த நோய் அடைந்தார் குணங்களை ஆராய்ந் தறிக. மிக இரகசியமாகச் செய்யும் குற்றங்களே காசமாகவும், க்ஷயமாகவும் மாறுகின்றன. அக்காரணங்கள் - அக் குற்றங்கள் - அவ்வளவு இரகசியமானவை யாதலாற்றான் வைத்தியர்களுக்குந் தெரிவ தில்லை. அவர்கள் அறிந்தாலும் கூறினால் மற்றவர் ஏற்கார். ஆதலின், காரணம் இன்னது எனக் கூறார். பாப எண்ணங்கள் கொடிய நோய்களாக உரு வெடுப்பது சாதாரணமாக ஒரு நாளில், ஒரு திங்களில் நடைபெறுவது இல்லை; சில வருஷங்களில், பல வருஷங்களில் நடைபெறுவது என்க. ஆகையாற்றான் நரகங்கள் நிறைந்த பாதாள லோகத்தை,

பூமிக்கு அடுத்திருப்பதாகக் கூருமல், அதலம் முதலிய ஆறுலகங்கள் இடையிட்டுப் பூமிக்கு வெகு தூரத்தில் இருப்பதாகப் புராணங்கள் வருணிக்கின்றன. அன்பு வாழ்க்கையில் - பூலோக வாழ்க்கையில் - நெடுந் தூரம் மாறுபட்டுச் சென்றவர்தாம் துன்ப வாழ்க்கையை - நரக வாழ்க்கையை - பாதாள வாழ்க்கையை - அடைகின்றனர்.

மனோ மய கோசத்தில் வாழ்பவருக்கு மனம் பொறி வழிச் செல்கின்றது. அன்ன மய கோசத்தில் வாழ்பவருக்கு மனம் பொறி வழிச் செல்வதில்லை. அவர்கள் உண்டு உறங்குகிருர்கள். "உருசியாக உண்ண வேண்டும்; அழகிய காட்சிகளைக் காண வேண்டும்; இன்னிசை கேட்க வேண்டும்; சந்தனம் பூசி மாலை யணிந்து வாசனை நுகர வேண்டும்; வெட்டி வேர் விசிறிகொண்டு வீசிக் கொள்ள வேண்டும்" என்னும் இச்சைகள் அவர்க்குத் தோன்றுவதில்லை. பிராண மய கோசத்தில் வாழ்பவருக்கு இவ் விச்சைகள் சிறிது தோன்றி மறைகின்றன; நேர மின்மையால். இவ் விச்சைகள் மனோ மய கோசத்தில் வாழ்பவருக்கே மிகுதியும் தோன்றுகின்றன. இவ் விச்சைகள் பெரும்பாலும் பாப மார்க்கத்தில் செலுத்துகின்றன வாயினும், இவ் விச்சைகளை யுடைய மனோ மயகோச வாழ்க்கையினர், அன்ன மய பிராண மய கோசங்களில் வாழ்பவரை விட மேலானவர்தாம். ஏனெனில், அவ் விரு வகையினர் வாழ்க்கையை முறையே கல், மரம் போன்ற வாழ்க்கை என்றும், மிருக வாழ்க்கை என்றும் முன்னே கூறினோம். பாபம் செய்பவ னாயினும் மனோ மய கோசத்தில் வாழ்பவன்தான் மனிதன். மனிதன்தான் பாபம் செய்ய முடியும்; புண்ணியமும் செய்ய முடியும். மரமும், மிருகங்களும் புண்ணிய பாபங்களைச் செய்யுமா?

நினைக்காவிட்டால் புண்ணியமு மில்லை; பாபமு மில்லை. குற்றம் செய்தவன் - கொலை செய்தவன் - பல நாள் நினைத்துத் தீர்மானித்து அதனைச் செய்தான் என்று

ருசுவானல் - மெய்ப்பிக்கப்படின் - நீதிமன்றத்தினர் அவனுக்கு அதிக தண்டனை கொடுக்கின்றனர். அவன் குடி வெறியால், அல்லது கோபத்தால் திடீரென்று தூண்டப்பட்டு, அக் குற்றம் செய்தான் என்று மெய்ப்பிக்கப்படின், அவனுக்குத் தண்டனை குறைவாக அளிக்கப்படுகின்றது.

மனோ மய கோசத்தில் வாழ்பவர் மிகு ஜாக்கிரதையாக வாழ வேண்டும்; இன்றேல், கெடுதல் அடைந்து விடுவர். நூல்களில் கூறப்படும் ஆகார நியமம், சந்தியா வந்தனம் முதலிய நித்திய கர்மங்கள், பக்தி, யோகம், விரதம் முதலியன இவர்க்கேயாம். இவர்கள் மனத்தினுல் வாழ்கின்றனர். அம் மனம் சுத்தமாய் இருக்க வேண்டும். நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் சாதனங்களெல்லாம் மனம் சுத்த மாவதற்கே. "ஆகார சுத்தி: சத்வ சுத்தி:"— "ஆகார சுத்தத்தினுல் மனச் சுத்தம் உண்டாகின்றது." "மனமது செம்மையானுல் மந்திரம் ஜெபிக்க வேண்டாம்" என்னும் வாக்கியங்களை நோக்குக. மற்ற மதத்தினர் உணவிற்கும் மனத்திற்கும் உள்ள தொடர்பை அவ்வளவு கவனிக்க வில்லை. ஆனுல், இந்து மத ஆசாரியன்மார், மனத்துக்கும் உணவுக்கும் உள்ள தொடர்பை நன்கு உணர்ந்து, உணவைத் திருத்துவதன் மூலம் மனத்தைத் திருத்த வேண்டும் என்றனர். உலகில் உள்ள எல்லாப் பொருள்களிலும் சத்வ, ரஜஸ், தமோ குணங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு பொருளில் ஒவ்வொரு குணம் அதிகமாகவும் மற்ற இரு குணங்கள் குறைவாகவும் இருக்கும். ஒரு பொருள் எக் குணம் அதிக முடையதோ அக் குணம் உடையதாகக் கூறப்படும். ஆனுல், அப் பொருளில் மற்றிரு குணங்களும் சிறிய அளவில் இருக்கின்றன. உணவையும், தமோ குணம் உடையது, ரஜோ குணம் உடையது, சத்துவ குணம் உடையது என்று பிரித்தார்கள். மாமிசம், பழையது, முதலியன தமோ குணம். மிளகாய், உப்பு, கடுகு, பூண்டு முதலியன ரசோ குணம். பழம், பசுப்பால் முதலியன சத்துவ குணம். தமோ குணம் தூக்

கம், புத்தி மந்தம் முதலியவற்றுக்குக் காரணமாம். ரசோ குணம் சுறுசுறுப்பு, வீண் அலைவு, ஆசை முதலியவற்றுக்குக் காரணமாம். சத்துவ குணம் சாந்தம், அன்பு, புத்தித் தெளிவு முதலியவற்றுக்குக் காரணமாம். ஈண்டு நூல்களில் நுணுகி ஆராய்ந்தாலன்றி அகப்படாத ஒரு நுட்பம் கூறுகின்றேன் : எந்த உணவாயினும் அது மலச் சிக்கலை உண்டாக்குமாயின் அஃது உடலையும், மனத்தையும் கெடுக்கும். அஃது தமோ குண உணவே. வயிற்றில் மலம் இருந்தால், மனத்தில் மலம் - கெட்ட எண்ணம் — இருக்கும். இதன் விரிவை எமது உணவு மருந்துவம் என்னும் நூலில் காண்க.

இனிப் பொய்யில் புலவர் திருவள்ளுவர், "மனத் தூய்மையும் செய்வினை தூய்மையும் இனத் தூய்மையால் - நல்லவர்களோடு சேர்ந்து பழகுவதால் - உண்டாகும்" என்பர். "Keep good company or none — நல்லவர்களோடு பழகு; அல்லது யாரோடும் பழகாதே" என்னும் ஆங்கிலப் பழமொழியும் கவனிக்க.

"மனத்தினால் எண்ணித்தானே வந்ததிவ் வுலகமாகும்." ஒவ்வொருவனுக்கும் அவனவன் உலகம் வேறு. இக் கருத்தை உணர்வது சிறிது கடினம். நல்ல எண்ணங்களை எண்ணுகிறவன் நல்ல பேச்சுப் பேசுவான்; நல்ல செயல்களைச் செய்வான். அவனுக்கு இவ் வுலகம் நல்லதாகும். உலகம் அவனுக்கு இனிமை தரும். எல்லாரும் அவனுக்கு நண்பரா யிருந்து நன்மை செய்வர். தீய எண்ணங்களை எண்ணுகிறவன் தீய பேச்சுக்களைப் பேசுவான்; தீய செயல்களைச் செய்வான். அவனுக்கு இவ் வுலகம் தீயதாகும். உலகம் அவனுக்குத் துன்பந் தரும். எல்லாரும் அவனை வெறுத்து அவனுக்குத் தீமை செய்வர். தன்னால் தான் தனக்குக் கெடுதி வருகிறதென்பதை அவன் உணரான். கெடு மதி கண்ணுக்குத் தோன்றாது. ஆகையால், ஒருவன் தன் மனதில் கெட்ட எண்ணம் தோன்றினால்,

"ஐயோ! எனக்குக் கெடுதல் உண்டாகும்" என்று அஞ்சுக! மனத்தில் நல்ல எண்ணங்களையே எண்ணுக!

மனோ மய கோச வாழ்க்கை இரசோ குண வாழ்க்கை. இவ் வாழ்க்கை வாழ்பவர் முதலில் அறிவுச் செல்வத்தைச் சம்பாதிக்க வேண்டும். பிறகு, பொறிகளை வெல்ல வேண்டும்; சிறந்த ஒழுக்க முடையவர்களாக வாழ முயல வேண்டும். அப்போது அவர்கள், பூமியில் தேவராக - பிறரால் மதிக்கப்படுபவராக - விளங்குவார்கள். இவர்கள் அறிவைப் பெறுதலும், பொறிகளை அடக்குதலும் இன்றி வாழ்வரேல், ஒழுக்க மற்றவ ராவர்; அதனால், கீழ் மக்களாக மதிக்கப்பட்டுத் துன்ப மனுபவித்து வாழ்வர்.

ஆசாரஞ் செய்வா ராகில்
அறிவொடு புகழு முண்டாம்
ஆசாரஞ் செய்வா ராகில்
அவனியில் தேவ ராவார்
ஆசாரஞ் செய்யா ராகில்
அறிவொடு புகழு மற்றுப்
பேசாமற் பேச்சு மாகிப்
பிணியொடு நரகில் வீழ்வார்.

என்னும் ஆன்றோர் செய்யுளும் இக் கருத்தை வற்புறுத்துகின்றது.

வாழ்க்கையில் உயர்வு தருவது எது? "ஒழுக்கம் உயர்வு தரும்" என்று பொய்யில் புலவர் கூறுகின்றார். ஒழுக்க மாவது யாது? சிறந்த ஒழுக்க முடையவனா யிருக்க ஒருவன் என்னென்ன செய்தல் வேண்டும் என்பவைகளைத் திருவள்ளுவர் கூறார். சுருக்கமாகப் பேருண்மைகளைக் கூறுபவர் வள்ளுவர் ஆதலின், இவற்றை வேறு நூல்களைப் படித் தறிக என்று தாம் கூறாது விடுத்தார். அவ் வொழுக்கமும் தன்னைப் பற்றியது, பிறரோடு பழகும் போது மேற்கொள்ளத் தக்கது முதலாகப் பலவகைப்படும்.

பெரும்பான்மையினர், ஒழுக்கமாவது யாது என்று கருதா மலே உண்டுடுத்து வாழ்ந்து ஒழிகின்றனர். அவர்கள் வாழ்க்கை பணக்கார வாழ்க்கையாக இருப்பினும் இருக்க லாம்; படித்தவர் வாழ்க்கையாக இருப்பினும் இருக்கலாம். ஆனால் அது சிறந்த வாழ்க்கை யாகாது. "தொடக்கத் தில் மேற்கொள்ளத் தக்க ஒழுக்கங்களையாவது அறிய வேண்டும். அவற்றை யுணர்த்தும் நூல்கள் எவையோ?" என்பார், யாம் எழுதிய வாழ்க்கையில் உயரும் வழி, வாழ்க் கையின் அடிப்படை என்னும் இரு நூல்களைப் படித்தறிக.

## விஞ்ஞான மய கோச வாழ்க்கை

விஞ்ஞானம் விசேஷ ஞானம். . புத்தியும் ஞானேந் திரியங்களும் கூடியது விஞ்ஞான மய கோசம் என்பதை நாம் ஞாபகப்படுத்திக்கொள்ளல் வேண்டும். மனோ மய கோச வாழ்க்கையினருக்கு, ஒரு பொருளைக் கண்டால் விருப்பு அல்லது வெறுப்பு உண்டாகும். அவர் அதனைப் பெற அல்லது ஒழிக்க முயல்வர். விஞ்ஞான மய கோச வாழ்க்கையினர்க்கு (thinkers) ஒரு பொருளைக் கண்டால் அதனைப் பற்றி ஆராய்ச்சி உண்டாகும். அவ் வாராய்ச்சி யின் பெருமைக் கேற்ப அப் பொருளைப் பற்றிச் சில அல் லது பல நுட்பமான உண்மைகளைக் கண்டு பிடிப்பர்; புதுப் பொருள்களையும் செய்பவர் (inventors) ஆவர். அவ் வாராய்ச்சியும், புதுப் பொருள்களும் நன்மைக்கும் பயன்படலாம்; தீமைக்கும் பயன்படலாம். அவை, பயன் படுத்திக் கொள்ளும் உலகத்தவர் மன நிலையைப் பொறுத்து, நன்மையோ, தீமையோ அளிக்கும். கத்தியால் பழத்தை அறுத்து உண்ணலாம்; கையையும் அறுத்துக் கொள்ளலாம்; மற்றவன் கழுத்தையும் அறுக்கலாம் அல்லவா?

விஞ்ஞான மய கோச வாழ்க்கையினர் நாட்டின் செல் வங்கள். அரசராலும் விரும்பப்படும் அறிவுடையவர்கள் அவர்கள்தாம். அறிவுடை யொருவனை அரசனும் விரும்

பும். வெறும் இலக்கண இலக்கிய அறிவு மாத்திரம் உடைய பண்டிதர்கள் தங்களை அறிஞராக மதித்துக் கொள்ளல் கூடாது. அவர்கள் சிறந்த கணக்காயராக - ஆசிரியராக - விளங்கலாம்; ஆனால், அறிஞராகார். அவர்களிலே ஒருவர் கம்பராமாயணத்திலே மூழ்கி உலகை மறப்பரேல், அவர், தம் கம்ப ராமாயண ஆராய்ச்சியால் திரு வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்களைப் போலக் கற்றவரை மகிழ்விக்கலாம். இலக்கண ஆராய்ச்சியில் உலகை மறப்பரேல், "பகுதியே ஏவல் ஒருமையாம்; விகுதி வேண்டா" என்பதற்கு, இருபதுக்கு மேற்பட்ட காரணம் கூறும் திரு. மு. வரதராசனார் போலப் பண்டிதரை மகிழ்விக்கும் பண்டிதராக விளங்கலாம். வைத்தியம், கைத்தொழில், இயந்திரம், வானசாஸ்திரம், மதம், தத்துவ சாஸ்திரம் முதலிய கணக்கற்ற ஆராய்ச்சித் துறைகள் உள்ளன. இப் பொருள் நூல்களில் ஒன்றில் அல்லது பலவற்றில் மிக்க அறிவு உடையவரே அறிஞராக மதிக்கப்படுவார். பெரும்பாலும் ஓர் அறிஞர் ஒரு துறையில் தான் மூழ்க, நேரமும் வசதியும் உண்டு. ஓரா ஒருவர் அருமையாய்ப் பல துறைகளில் மூழ்குதலும் உண்டு.

பொறிகளை வென்று, சத்துவ குண ஆகாரங்களையே உண்டு, மனம் அடங்கிய வாழ்க்கையினராக வாழ்ந்த முற்காலத்துப் பிராம்மணர்கள், அறிஞர் அல்லது அறிஞராதற் குரியவர் (potential thinkers). ஆதலினாற்றான் மிகவும் மதிக்கப்பட்டனர். அவர்கள் வேறு நாடு செல்லுதல் கூடாது; கடல் கடந்து செல்லுதல் கூடாது என்பதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. வேறு நாடு சென்றால் ஆசாரம் குறைந்தவராய் - பதிதராய் - விடுவர் என்பது சாதாரண காரணம். கள்ளையும், ஊனையும், மகளிரையும் தொடுவதில்லை என்று சத்தியம் செய்து கொடுத்த பின்பே, காந்தியடிகள் இங்கிலாந்து செல்வதற்கு அவர் தாயாரால் அனுமதிக்கப்பட்டார். இதனை நோக்கி, இதுவும் எவ்வளவு முக்கிய காரணம் என்பதை

உணர்க. மற்றொரு காரணம் மிகவும் உயர்ந்தது. நாட்டின் செல்வங்கள் - அறிவுச் செல்வங்கள் - ஆகிய இவர்கள் வேறு நாடு செல்லின் தம் நாடு வறுமை யடையும். எந் நாடும் அறிஞரை இழக்கச் சம்மதியாது. "அறிவுடையோ ரூறு அரசுஞ் செல்லும்" என்பதனால், இந்த அறிஞர் கூட்டத்திலிருந்துதான் அமைச்சர், சேனாதிபதியர், முதலியவர் தோன்றி நாட்டின் அரசை நடத்துகின்றனர் என்ப துணர்க. திரு. ஜவஹர்லால் நேரு, திரு. ராஜகோபாலாச்சாரியார் போன்றவர்கள் உலகம் மெச்சும் அரசிய லறிஞர் அலரோ! திரு. சி. வி. ராமன், திரு. ஜெ. சி. போஸ், திரு. பி. சி. ரே போன்றவர்களை நிரந்தரமாக வேறு நாட்டுக்கு அனுப்பிவிட நாம் சம்மதிப்போமா? நாட்டுப்பற் றுடைய அவர்தாம் தம் நாட்டை விட்டுச் செல்வரோ? இரண்டாவது உலக மகா யுத்தம் முடிந்தவுடனேயே ஜெர்மனியில் ரஷியாவும் அமெரிக்காவும் விஞ்ஞானி வேட்டை - அறிஞர் வேட்டை - ஆடின. அதிகமான விஞ்ஞானிகளை ரஷியா கைக் கொண்டதாம். அணுக்குண்டு ரகசியத்தையும் அதற்குரிய விஞ்ஞானிகளையும் அமெரிக்கா கைக்கொண்டது அதன் அதிர்ஷ்டமேயன்றோ! இங்ஙனம் ரஷியரும் அமெரிக்கரும் ஜெர்மனியிலிருந்து கொள்ளை கொண்ட செல்வம். (அறிஞரின் மதிப்பு) இரு நூறு வருஷ ஆட்சியில் ஆங்கிலேயர் இந்தியாவி லிருந்து கொள்ளையடித்துச் சென்ற செல்வத்தைவிட எத்தனை மடங்கு அதிகமானது? எண்ணிப் பாருங்கள்!

மனோ மய கோசத்தில் வாழ்பவர் மிக முயன்று பொறிகளை அடக்க வேண்டும். விஞ்ஞான மய கோசத்தில் வாழ்பவர் பொறிகளை அடக்க வேண்டா. அவர்கள் மனம் ஆராய்ச்சியில் சென்ற தாகலின் பொறி வழிச் செல்வ தில்லை. அவர்கள்தாம் இயல்பாகவே ஆசை கோபங்கள் அற்றவர். அவர்கள் ஆராய்ச்சியில் மூழ்கியிருக்கும் போது பசி தாகங்களையும் உணரார். உண்ணும்

போதும் அவர் மனம் நாவோடு உறவாடி உருசி யறிவ தில்லை.

> மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
> எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் — செவ்வி
> அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
> கருமமே கண்ணாயி னார்.

என்னும் செய்யுளுக்கு இலக்கியமாக விளங்குபவர் அவர் களே.

ஓர் ஆங்கில அறிஞர், குறிப்பிட்ட நேரத்தில் உண் பவர், தம் உணவறைக்கு வந்தார்; அங்குத் தம்மைக் காண வந்திருந்த நண்பரையும் கவனிக்க வில்லை; உணவு மேஜை யருகில் சென்றார்; பாத்திரத்தைத் திறந்தார். அது காலியாய் இருந்தது. உடனே தாம் முன்னரே உண வருந்தி விட்டதாக நினைத்துக்கொண்டார். "என்னே! இப்போதுதான் உண்ட நான், திரும்பவும் பசி எடுப்பதாக நினைத்துக் கொண்டேனே!" என்றார். நண்பர் அவரைப் பார்த்து, "இல்லை! பசியா யிருந்தபடியால் உங்கள் உணவை நான் உண்டுவிட்டேன். ஆள், திரும்பவும் உணவு கொண்டுவரப் போய் இருக்கிறான்" என்றார். அறிஞர், "என்ன ஆச்சரியம்! சாப்பிடாமலேயா சாப் பிட்டு விட்டதாக நினைத்துக்கொண்டேன்! நன்று!" என்றார். இருவரும் ஆச்சரியத்தால் பெருநகை செய்தனர். ஆராய்ச்சியால் பசியையும் மறந்த இவர் போன்றவர்கள் உலகை மறந்தார்களா? நினைத்துக்கொண் டிருக்கிறார் களா?

மின்சார விளக்கில் எரியும் வர்த்தியை (filament) மூன்று விஞ்ஞானிகள் பன்னிரண்டு நாள் உணவும் உறக் கமும் இன்றி உழைத்துச் செய்து முடித்தனர். அதனை விளக்கில் பொருத்துவதற்கு அடுத்த கட்டிடத் துக்கு எடுத்துச் செல்லும்போது அது காற்றில் பறந்து

KOVILOOR MADALAYAM
KOVILOOR-630 307
(NEAR) KARAIKUDI
8539
R65:31

உடைந்துவிட்டது. மேலும் மூன்று நாள் தொடர்ந்து உழைத்து, அதனை மறுபடி செய்து விளக்கிலும் பொருத்தி வெற்றி பெற்றனர். அவர்கள் போன்ற எத்தனை விஞ் ஞானிகளின் உலகை மறந்த உழைப்பால், நாம் இன்று மின்சார விளக்கு முதலியவற்றைப் பெற்றுச் சுகித்து மகிழ்கின்றோம்!

பாரதத்தைத் தமிழில் பாடிய நல்லாப் பிள்ளை யவர் களைப் பற்றி ஒரு வரலாறு கூறப்படுகின்றது. அவர் தம் இருபதாம் வயதுவரை விளையாட்டும், போக்கிரிகள் நட் பும் உடையவராய் இருந்தார். அவர்க்கு மணமும் ஆகி யிருந்தது. மனைவி நெல் குற்றித் தன் உழைப்பால் சம் பாதித்து வரும் உணவை அவர் வேளைக்குச் சென்று உண் பார்; ஒரு நாள் வேளை தவறிச் சென்றார். மனைவி கார ணம் கேட்க, அவர், "நான் படிக்கச் சென்றேன். நேர மாகி விட்டது" என்று விளையாட்டாகக் கூறினார். மனைவியும் புன்னகையோடு, "உனக்குப் படிப்பு வந்தால் என் உலக்கைக்குக் கொழுந்து முளைக்கும்" என்றாள். "நான் படித்த பிறகு சாப்பிடுவேன்" என்று வெளியே வந்துவிட்டார் அவர்; ஒரு புலவர் வீடு நோக்கிச் சென் றார்; அவரைக் கண்டு தமக்குப் பாடம் கற்பிக்கவேண்டும் என்றார். புலவர், "உனக்குப் படிப்பு வராதே" என்றார். "எனக்குப் படிப்பு வராதென்று நீங்கள் கூறினால், நாக் கைப் பிடுங்கிக்கொண்டு இங்கேயே இறந்துவிடுவேன்" என்றார் இவர். படிப்பு ஆரம்ப மாயிற்று. புலவர் வீட்டி லேயே உணவும் படிப்பும். நான்கு வருடங்கள் சென் றன. அரிச்சுவடிமுதல் தொல்காப்பியம் வரை ஓதி யுணர்ந்து பண்டிதர் ஆனார். ஒரு நாள் உண்ணும்போது, "துவையல் கசக்கிறது!" என்றார் அவர். புலவரும், "உனக்குக் கல்வி முடிந்தது. உனக்குத் தினம் வேப்பி லைத் துவையல் தான் வைத்தோம். படிப்பில் உன் மனம் சென்றிருந்தபடியால் கசப்பை உணரவில்லை. படிப்பு முடிந்தது. உன் நாக்கிற்குக் கசப்புத் தோன்றிற்று"

என்ருர். அவர் அந் நான்கு வருஷமும் விஞ்ஞான மய கோச வாழ்க்கையினராக இருந்தார் என்பது ஒருதலே.

ஒரு தருக்க நூலறிஞர் தருக்கநூ லெழுத ஆரம்பித்தார். சில வருஷங்கள் சென்றன. நூல் எழுதி முடிந்தது. அன்று உணவு அருந்தும்போது உண்கலத்தில் எலும்பு பரிமாறப்பட் டிருப்பதைக் கண்டார்; "பெண்ணே! நான் கங்கை யல்லன்; கங்கேச பட்டன்" என்ருர். தம் முகத்தையும் பாராமல் தருக்க நூலில் மூழ்கி யிருந்தவர் இதுவரை எலும்பைக் கவனியாமல் இருந்து அன்று கவனித்த தறிந்து, மனைவியார் உளம் பூரித்து, "தாங்கள் நேற்று வரை கங்கையாகவே இருந்தீர். இன்று கங்கேச பட்ட ராயினீர். எனக்கு மிரம்ப மகிழ்ச்சி" என்ருர்.

சாதாரணமாகப் பரிட்சைக்குப் படிக்கும் பிள்ளைகளில் சிலர் உணவு முதலியவற்றை மறந்து, சில நாள், பரிட்சை முடியும்வரை புத்தகங்களில் - படிப்பதிலும் எழுதுவதிலும் - மூழ்கி யிருப்பர். அவர்கள் அத்தனை நாள் மாத்திரம் விஞ்ஞான மய கோச வாழ்க்கையினராக இருக்கின்றனர் எனலாம். நவீனங்களைப் படிப்பவர் அவற்றை முடிக்கும்வரை உலகத்தை மறந்து நிற்கின்றனர். வான சாஸ்திரம் எழுதிய ஜெர்மானியர் ஒருவர், "வான நங்கை தன்னைப் பார்த்தவரை மற்றவரைப் பாராவாறு மயக்கி விடுகிருள்" என்று தொடங்கி அந் நூலை எழுதினர். இவ்வாறு ஒன்றில் மூழ்கி - ஆராய்ச்சி வடிவமாக இருந்து - உலகை மறந்து - ஆசை கோபம் முதலிய மன வெழுச்சிகளுக்கு இடமே இன்றி - நடக்கும் ஆராய்ச்சி வாழ்க்கை - அறிஞர் வாழ்க்கை - விஞ்ஞான மய கோச வாழ்க்கை யாம்.

ஒரு மணி நேரம், ஒரு நாள், ஒரு மாதம், ஒரு வருஷம், சில வருஷம் உலகை மறந்து ஆராய்ச்சியில் மூழ்கி யிருப்பது சந்தர்ப்பங்களால் பலருக்கு வாய்க்கலாம். அவர்கள் விஞ்ஞான மய கோச வாழ்க்கையினர் ஆகார்.

வாழ்க்கை முழுதும் உலகை மறந்து ஆராய்ச்சியில் மூழ்கிய வர்களே விஞ்ஞான மய கோச வாழ்க்கையினர் ஆவர். அன்னூர் மனோ மய கோசத்திலும், பிராண மய கோசத்தி லும் சிறிது வாழ்க்கை நடத்தலாம். ஐந்து நிலை வீட்டில் நான்காம் நிலையில் வசிப்பவரும், கீழ்க் கீழ் நிலைக்கு வரா மல் எப்படி வாழ முடியும்?

விஞ்ஞான மய கோசத்தில் வாழ்பவர் சன்யாசிக ளாகவோ அல்லது யோகிகளாகவோ இருக்க வேண்டும் என்ப தில்லை; குடும்பஸ்தராகவே இருப்பினும் இருக்க லாம். சென்னை, மயிலையில் வாழ்ந்த ஒரு நியாயவாதி, தம் தொழில் நடத்துவதில் மாத்திரம் பேராராய்ச்சி யுடை யவராய் நிபுணராக இருந்தார் என்றும், தம் குடும்பத்தை யும் பந்துக்களையும் அவர் சிறிதே அறிவார் என்றும், வரு மானத்தைத் தம் மனைவியாரிடத்தில் கொடுத்துவிட்டுத் தமக்கு வேண்டும் பணத்தையும் மனைவியிடம் கேட்டுப் பெறுவார் என்றும், குடும்ப வியவகாரம் எல்லாம் மனைவி யிடம் ஒப்படைத்துத் தாம் சட்ட வியவகாரம் மாத்திரம் உடையவராய் வாழ்ந்தபடியால், சட்டத்தில், அவர் இட் டது பிச்சை எனும்படி சட்டப் பேரறிஞராக விளங்கினா ரென்றும் கேட்டிருக்கின்றோம். இதுபோன்ற வாழ்க் கைக்கு மனைவியும் மக்களும் அறிவு ஒழுக்கம் நிரம்பியவ ராய் இருத்தல் இன்றியமையாதது.

மனோ மய கோச வாழ்க்கையை விட்டு, விஞ்ஞான மய கோச வாழ்க்கையினராக விரும்புபவர் தம் மனைவி யின் நிலையையும் நன்கு ஆராய்ந்தே ஒரு முடிவுக்கு வரு தல் வேண்டும். இதுபற்றி மகாத்மா காந்தியவர்களின் கருத்து ஈண்டுக் கொள்ளத் தக்கது. "இல்லத்தி விருப் பவன் பக்தி, தர்மம், கல்வி முதலியவற்றில் மனைவியையும் உயர்த்தப் பாடுபட வேண்டும். மனைவி உயராவிட்டால் தான் தாழ் நிலையில் இருக்க நேரும். தன் உயர்வுக்காக மனைவியை விட்டுவிடுதல் பொருந்தாது. தன் உயர்வுக்கு மனைவி வேண்டுமென்றே தடை செய்வதா யிருந்தால்தான்

மனைவியை விடலாம். அப்படி இனி உயர்வை அடையப் போகிற ஒருவன், மனைவியை விடுதல், தான் பஞ்சேந்திரியங்களையும் ஜயித்தவனாக இருந்தால்தான் பொருந்தும். ஜிதேந்திரிய னல்லாதவன் மனைவியின் குற்றங்களையும் பொறுத்துக்கொண்டு வாழ்க.'' சிலர் தாம் ஜிதேந்திரியர்களாக இருப்பதாக நினைத்துக்கொண்டு, குடும்பம் விட்டுச் சன்யாசிகளாகி, "ஒருத்தி வேண்டா மென்று கொள்வார் சன்யாசம்; ஊரில் உள்ள பெண்கள் மேலெல்லாம் நேசம்" என்னும் நிலையை அடைகின்றனர். அந்தோ! வீழ்ச்சி! வீழ்ச்சி!! தான் ஜிதேந்திரியனாக இருந்தால் கூட, மனைவியை விடுதல் வழக் கன்று. உயர்ந்தோர்க்கு மணம் பிரிக்க முடியாதது. "மனைவியை விடுகிறவன் அவளை விபசாரி யாக்கிய குற்றத்துக் குட்படுகிறான்" என்று கிறிஸ்துநாதர் கூறி யிருக்கின்றார்.

இல்லறத்தை மேற்கொண்டவனுக்கு மனைவியை உயர்த்துதல் கடமை. அவளை உயர்த்த முடியாவிடினும் உடனிருந்து வாழ்தல் கடமை. தன்னுடைய உயர்வுக்கு - ஆத்மீக சாதனங்களுக்கு - மனைவி தடையாயிருக்கின்றாள் என்று நினைக்கின்றவன், தன்னுடைய உயர்வுக்குத் தானே தடையா யிருக்கின்றானா இல்லையா என்பதை நினைத்து அறிக. தான் உண்மையாக உயர்ந்த மார்க்கத்தில் செல்வதாக இருந்தால் தன் சன்னிதானத்தால் எப்பொழுதும் உடனிருக்கும் மனைவி ஏன் உயர் நிலை யடைய வில்லை? தான் உயர்ந்தவன்; மனைவி தாழ்ந்தவள் எனின், மனைவியை உயர்த்த முடியாத இவன் உயர்விலும் சந்தேகமன்றோ தோன்றுகிறது! சங்கத்தில் பயனுண்டெனில், மனைவிக்குப் புருடனுடைய சத்சங்கத்தால் உயர்வு ஏன் ஏற்பட வில்லை? இங்ஙனம் ஆராய்ந்து அடங்குக.

முப்பது வருடங்கட்கு முன் என்னோடு ஆசிரியர் கோ. வ. அவர்களிடம் வேதாந்த நூல்களைப் பாடம் கேட்டு வந்த ஒருவர், "நான் சன்னியாசம் பெற்றுக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன். வேதாந்த நூல்களைப் பாடம் கேட்

கிறோம். பாடங்களைத் திருப்பிப் பார்க்க நேர மில்லை. சிந்தனை செய்ய நேர மில்லை. இனி அப்பியாசம் செய்ய நேரம் ஏது? ஐய மேற்றுப் பசி தீர்த்து, எல்லா நேரத்தையும் வேதாந்த ஆராய்ச்சியில் செலவிடலா மன்றோ?'' என்றார். நான், "நமக்கு ஞாயிற்றுக் கிழமை விடுமுறை நாள். மற்ற நாளைவிட ஞாயிற்றுக் கிழமையில் வேதாந்த முயற்சிக்கு எவ்வளவு அதிக நேரம் செலவழிக்கிறோம் என்று யோசித்துக் கூறுங்கள்'' என்றேன். அவர், "ஞாயிற்றுக் கிழமையில் வேதாந்தத்தைக் கவனிப்ப தில்லை'' என்றார். நான், "சரி, எல்லா நாட்களையும் ஞாயிற்றுக் கிழமையாக்கவா உங்கட்குச் சன்னியாசம் வேண்டும்? கிடைத்த நேரத்தைச் சரியாகப் பயன் படுத்தாதவனுக்கு அதிக நேரம் ஏன்? நம் போன்றவர்க் கன்று சன்னியாசம். மனத்தை நன்கு பண்படுத்தி வென்ற வீரர்க்குச் சன்னியாசம் உரியது. சோம்பேறிகட் கன்று. சுறுசுறுப்புடையவர்க்கு அஃது உரியது. கிடைத்த நேரத்தையும், பொருளையும் சரியாகப் பயன் படுத்தினல், இறைவன் அதிக நேரமும், பொருளும் அளிப்பான்'' என்றேன். அவரும் என் கருத்தை ஏற்றுக்கொண்டனர்.

## ஆனந்த மய கோச வாழ்க்கை

ஆனந்தமாகவே வாழும் வாழ்க்கை ஆனந்த மய கோச வாழ்க்கை. ஈண்டு, ஆனந்த மென்னும் சொல்லால் குறிக்கப்படுவது புல னின்ப மன்று. புல னின்பங்கள் தோன்றி மறைவனவா யிருத்தலின், அவை ஆனந்த மென்னும் சொல்லால் சொல்லத் தகுவன அல்ல. புல னின்பங்களை ஆனந்தங்கள் அல்ல என்று கூற வில்லை. அவை ஆனந்தங்களே - இன்பங்களே. ஆனல், அவை அற்ப ஆனந்தங்கள் - சிற்றின்பங்கள் - தோன்றி மறையும் ஆனந்தங்கள். புலன்களால் தோன்ருத ஆனந்தம் உண்டேல் அஃது அற்ப ஆனந்தமாய் இராது. "ஆனந்தமாவது என்ன?'' என்று சிந்தித்தும், நூல்களை ஆராய்ந்தும், அறிஞர்களோடு அளவளாவியும் தெரிந்துகொள்

பவர், "புல னின்ப மன்றி வேறு இன்பம் உண்டு" என்று அறிதற்கு உரியர். அங்ஙனம் தெளிவாக அறிந்தவர் புல னின்பங்களை நாடார். அவர் புல னின்பங்களின் வேறாகிய அவ் வின்பத்தை அடையும் வழியும் அறிவர். இந்த வழி, அன்ன மய பிராண மய கோசங்களில் வாழ்பவர்க்கும், மனோ மய கோசத்தில் ஆசை வாழ்வு வாழ்பவர்க்கும் தெரியாது. இது மனோ மய கோசத்தில் அன்பு வாழ்வு வாழ்பவர்க்கும் அருள் வாழ்வு வாழ்பவர்க்கும் தெரியும். விஞ்ஞான மய கோச வாழ்க்கையினருக்கு இந்த ஆநந்த மய கோாச வாழ்வைப் பெறுதல் எளிது.

கல்வி யறிவு பெற்றவர்களில் கூட ஏமாற்றம் அடைபவர் பலர் உளர். சோம்பலை அமைதி என்றும், பயத்தைப் பொறுமை என்றும், வெறுப்பை வைராக்கியம் என்றும், தூக்கத்தைச் சமாதி நிலை என்றும் நினைத்தல் எவ்வளவு மடமை! சுறுசுறுப்பு உடையவன்தான் அமைதி பெறுவான் என்றும், அஞ்சாதவன் தான் பொறுமையுடையவன் என்றும், அன்புடையவன்தான் வைராக்கியமுடையவன் என்றும், விழிப்பில்தான் சமாதி நிலை வரும் என்றும் கூறினால் புரிந்துகொள்வது சுலபமா யிருக்கிறதா? ஆனந்தமாக வாழ்வது ஆனந்த மய கோச வாழ்க்கை என்ற வாக்கியத்தால் பலர் ஏமாற்றம் அடையக் கூடும். புல னின்பங்களை எதிர்பாராத ஆனந்த வாழ்க்கை என்று மறுபடி ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். ஒருவன் வாழ்க்கையில் கஷ்டங்கள் ஒன்றும் நேராமையால் ஒரு பத்து வருஷம் அவன் வாழ்வு இனிது நடந்தது எனின், அஃது ஆனந்த மய கோச வாழ்க்கை ஆகுமா? ஆகாது. ஒரு சிறு கஷ்டம் நேர்ந்தபோது அவன் இன்பக் கோட்டை இடிந்து விழும். முன், இன்பத்தில் துள்ளிய அவன், இப்போது துன்பத்தில் துடிதுடிப்பான்.

ஆனந்த மய கோச வாழ்க்கையே அமைதி வாழ்க்கை-பேரமைதி வாழ்க்கை - என்பது மிகப் பொருத்தமும் புரிந்துகொள்ளக் கூடியதும் ஆம். பேரறிஞர்க்கே (wise

men) பேரமைதி யுண்டாம். அவர்கள் இன்பம் அடைய விரும்புவது இல்லை ; ஆனால் இன்பமாகவே இருக்கிறார்கள்.

இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன்.

உலகத்தின் இயல்பை எவ்வளவு நன்றாக அறிந்தால் ஒருவன் மனம் பேரமைதி யுறும்? ஒருவன் சமய நூல்களை நெட்டுருப் பண்ணிப் பொருள்களை உணர்ந்து அழகாகப் பிரசங்கம் செய்யலாம். அவன் பேரறிஞனாக ஆய்விட முடியாது ; அமைதியையும் அடைய முடியாது. சமயத்துக்கும் உலகியலுக்கும் சம்பந்த மில்லை என்று நினைப்பவர் எவ்வளவு ஏமாற்றம் உடையவர்! சமய நூல்களிலும் உலகியலிலும் கண்ட நுட்பமான உண்மைகளை வாழ்க்கையில் அனுசரிக்க ஒருவன் அறிகின்றான். மேலும் மேலும் நுட்பமான உண்மைகள் அவனுக்குப் புலப்படுகின்றன. உண்மை அவனுக்கு நிருவாணக் காட்சி யளிக்கின்றது. அவன் உண்மையைத் தழுவுகின்றான் ; உண்மையோடு ஒன்றுகின்றான். அறிஞன்! அவனே அறிஞன்!! பேரறிஞன்!!!

உலகம் அவனை மதிக்கின்றது ; வணங்குகின்றது ; அவன் சொல்லைக் கேட்கிறது. சில சமயம் - பல சமயம் - அவன் சொற்படி நடக்க முடியாமல் உலகம் தவிக்கிறது. தவிக்கும் பொழுதும் அவன் சொல்லுவதுதான் சரி என்று கொள்ளுகிறது. அவன் பெருமை இவ்வளவேயோ? சுய நலத்தில் - அறியாமையில் - மூழ்கிய உலகம் அவனைத் தவறாக உணர்ந்து, கொல்லவும் கொல்லும். அறிஞர் எல்லோரும் உலகத்தை நடத்துபவராக இருப்பார்கள் என்பது கருத்தன்று. ஓர் அறிஞனை எவ்வளவு உலகம் அறிகின்றதோ அவ்வளவு உலகம் அவனால் பயனடைகின்றது.

கிரேக்க நாட்டு அறிஞர் சாக்ரடிஸ் தம் நண்பர்களோடு பேசிக்கொண்டிருந்தார். அவர் மனைவி அவரைத் திட்டிக்கொண்டே இருந்தாள். தன் சொல்லைக் கேளாது

அவர் தம் அறிவுரைகளிலேயே கருத்தூன்றி யிருப்பது கண்டு கோபத்தால் பொங்கிய அவள், மாடியில் இருந்த மூத்திரத் தொட்டியை அவர் தலைக்கு நேராகக் கவிழ்த்தாள். அவர், "முன் இடி இடித்தது. இப்போது மழை பொழிகிறது. இஃது இயற்கை தானே" என்றார். எவ்வளவு அமைதி இருந்தால், கோபம் வரவேண்டிய அச்சமயத்தில், இத்தகைய அழகிய வாக்கியம் தோன்றும்! அவர் சிறையி லிருந்தபோது அவர் நண்பர், "நீங்கள் தப்பி வேறு நாட்டுக்குச் செல்லவேண்டிய ஏற்பாடு செய்திருக்கிறேன்" என்றார். அவர், "நான், சட்டத்திற்கு உட்பட்டுத் தண்டனையை ஏற்பேன். சட்டத்தை மதிக்க வேண்டும் என்று இதுவரை போதித்த நான், இன்று உயிருக்குப் பயந்து தப்பி யோடுவது, 'சட்டத்தை ஏமாற்றலாம்' என்று போதிப்ப தாகும்" என்று கூறி மறுத்தார். அச் சிறையிலேயே பின்பொரு நாள், வைத்தியர் (சட்டம் தீர்மானித்தவாறு) கொடுத்த விஷத்தைக் கைந் நடுங்காமலும் மனம் பதைக்காமலும் வாங்கி யுண்டு அமைதியாக உயிர் நீத்தார்.

மகாத்மா காந்தியடிகளின் அறிவையும், அமைதியையும், அஞ்சாமையையும் அறியாதார் யார்? ஆங்கிலப் போலீஸ் அதிகாரி தம்மேல் வீசப்பட்ட கல்லைக் காட்டி, "இதை நான் பத்திரமாக வைத்துக்கொள்வேன்" என்று கூறிய போது, காந்தியடிகள் தம் பேனுவை நீட்டி, "அதைக் கொடுத்து விட்டு இதைப் பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள்" என்றார். அவர் அவ்வாறு செய்யாமல்,

நன்றி மறப்பது நன்றன்று ; நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

என்று போதித்திருந்தால் அவர் அவ்வளவு சுலபமாக ஏற்றிருக்க முடியுமா? கொலையும் கொளுத்துதலும் நிரம்பிய நவகாளியில் தனியாகச் செல்லும் அஞ்சாமை, பேரறிவினாலும் பேரமைதியினாலுமே யன்றோ அவர்க்குக் கிடைத்தது!

ஆங்காங்கு நிகழ்ந்த சத்தியாக்கிரக வரலாறுகளைப் படிப்பவர், அவர், தம் அமைதியையும் அஞ்சாமையையும் எத்தனை நூற்றுக் கணக்கான மக்களுக்குப் பகிர்ந்தளித்துள்ளார் என்பதை உணர்வர். கத்தி யின்றி ரத்த மின்றி யுத்தம். தேகாப்பியாசம் இல்லாமல் வீரர் உற்பத்தி. போரின் நடுவண் அவர் இருந்தார். ஆனால், அறிவினால் அவர் மனம் பேரமைதி பெற்று நிலவியது.

அறிவிற்கும், அமைதிக்கும், ஆனந்த மய கோச வாழ்விற்கும் என்ன சம்பந்தம் என்று மேலும் மேலும் ஐயம் எழுகின்றது. ஆம், பேரறிவு பேரமைதியாம்; பேரமைதி பேரானந்தமாம். இதை மறுத்தால் வேறு வழி யில்லை.

இன்பம் எது? "புலன்களில் கிடைப்பது" என்பர் அறியார். "புலன்களில் கிடைப்பது அன்று" என்னும் அறிவு நூல். புலன்களில் இன்பம் கிடைப்பது பிரத்தியட்சம். ஒருவன் மாம்பழத்தை விரும்புகின்றான். அது கிடைக்க வில்லை. வருந்துகின்றான். கிடைக்காதவரையில் வருந்துகிறான். மாம்பழம் கிடைத்ததும் சுவைத்து உண்டு மகிழ்கின்றான். இம் மகிழ்ச்சி இன்பம் அன்றோ? மாம்பழத்திலிருந்து கிடைத்த தன்றோ?

இன்பம் மாம்பழத்திலிருந்து கிடைத்ததாயின் அஃது எவ்வளவு நேரம் இருக்கிறது? மாம்பழம் தின்கிற வரையில் இருக்கிறது. பழங்களைத் தின்றுகொண்டே யிருந்தால் - தின்று கொண்டே இருக்க முடியாது - இன்பமாகவே இருக்க வேண்டும். மாம்பழத்தில் வெறுப்புத் தோன்றக் கூடாது. ஆனால் உண்மை அப்படி இல்லை. மாம்பழம் இருக்கும்போதே, இன்பம் போய்விடுகின்றது. உண்மை என்ன? மாம்பழத்தில் இன்பம் இல்லை. பின், மாம்பழம் அடைந்தபோது ஏன் எப்படி இன்பம் உண்டாயிற்று? மாம்பழம் வேண்டுமென்று மனம் அலைந்து கொண் டிருந்தபோது துன்பமா யிருந்தது. பழத்தைப் பெற்று மனம் அமைந்தபோது இன்பம் தோன்றியது. மாம்பழம் பெற்றது மன அமைதிக்குக் காரணம். அந்த

மன அமைதி இன்பத்துக்குக் காரணம். மாம்பழத்தால் பெற்ற அமைதி சிறிது நேரமே இருந்தது. இன்பமும் சிறிது நேரமே இருந்தது. எந்தப் புலனும் சிறிது நேரமே அமைதியைத் தரும். ஆகையால் புலனின்பங்கள் சிறிது சிறிதாகவே தோன்றி மறைகின்றன.

அவ் வின்பமும் புலன்களினின்று கிடைப்ப தன்று. விரும்பிய பொருளைப் பெற்றபோது மனம் அமைகிறது. ஆத்மா இன்ப வடிவினதாதலின் அமைந்த மனத்தில் ஆத்மாவின் இன்பம் தோன்றுகிறது. புலன்களைப் பெற்ற போது தோன்றிய தாதலின் ஆராய்ச்சி யில்லார் அதனை ஆத்மாவின் இன்பமென அறியாது, புலன் இன்பமென அறிகின்றனர். நாயும் எலும்பைக் கடிக்கிறது. எலும்பு அதன் ஈறில் குத்துகிறது. ஈறிலிருந்து இரத்தம் வரு கிறது. அதை நாய் சுவைக்கிறது. இரத்தம் தன் ஈறி லிருந்து வருகிறது என்று அறியாமல், தான் கடிக்கும் காய்ந்த எலும்பிலிருந்து வருகிறது என்று நாய் அறிகிறது. ஆகையாற்றான், நாய், எலும்பு கடிக்கும்போது யாராவது அருகில் சென்றால், அவர்கள் தன்னிடமிருந்து எலும்பை அபகரிக்க வருகிறார்கள் என்று நினைத்து அவர்களைக் கண்டு உறுமுகிறது! ஆ! என்னே எலும்பின் இனிமை!

யாதொரு பொருளையும் பெறுமலே மனம் அமையு மானால் இன்பம் அங்குத் தோன்றும். மனம் அமைந்த போது இன்பந் தோன்றாது என்று கூற வல்ல அறிஞர் ஒருவரும் இலர். ஆசை முதலிய மன எழுச்சிகளால் (emotions) மனம் அலைகிறது. மன அலைவே துன்பம். மன அமைதியே இன்பம்., சஞ்சலம் என்னும் சமஸ்கிரு தச் சொல் அசைவு (அலைவு), துன்பம் என்னும் இரு பொருளையும் தருவ தறிக. விழிப்பு நிலையில் துன்பம் உண்டு. கனு நிலையில் துன்பம் உண்டு. உறக்க நிலையில் துன்பம் இல்லை. ஏன்? அங்கு மனம் இல்லை. மனம் அலையு வில்லை. துன்பம் இல்லை. உறக்க நிலையில் மனம் ஓய்ந்து அமைகிறது. விழிப்பு நிலையில் - நாம் விழித்துக்

கொண் டிருக்கும்போது — முயன்று மன அமைதியைப் பெற வேண்டும்.

மனம் வெளியில் சென்றால் அலைவு. மனம் உள்ளே சென்றால் அமைதி. வெளியிலே செல்வது தெரிகின்றது. அதாவது புலன்களில் செல்லுகிறது. உள்ளே செல்வது தெரிய வில்லை. உள்ளே எங்கே செல்வது? மனம் பொறி வழிப் புறம் போகாமையே உள்ளே செல்வது. உடலி னுள்ளே சில இடங்களில் மனத்தை நிறுத்திப் பழகும் பழக்கமும் நூல்களில் கூறப்படுகின்றது. யோக நூல் களில் கூறப்படும் தாரணை, தியானம், சமாதி என்பன மனத்தை உள்ளே செலுத்தும் மார்க்கங்களாம். ஒருவன், "சிவ சிவ" என்று தியானித்துக்கொண் டிருக்கிறான். அப்போது அவன் மனம் ஐம்புலன்களில் செல்லுவ தில்லை; உலகத்துப் பொருள்களுள் ஒன்றையும் நினைப்ப தில்லை. இதுதான் மனம் உள்ளே செல்வது. எல்லாச் சமய நூல்களிலும் கூறப்பெறும் காலை விழித்தல், உணவு நியமம் முதலியனவும், கர்மம், பக்தி, யோகம், ஞானம் முதலியனவும் மன அமைதியைப் பெறும் வழியாம். மன அமைதிக்குக் காரணம் ஆகாத ஒரு சாதனம் இருந்தால் அது யாருக்கும் வேண்டுவ தில்லை. இக் கருத்தையே தேவி காலோத்ரம்:

மந்திரம் ஜபம் தியானம்
பூசனை வணக்கம் வேண்டா
அந்தமில் லாத முத்திக்
குபாயமே யறிதல் வேண்டும்
சிந்தனை புறமே செல்லின்
துயரமாம் திரிய மீட்கில்
பந்தமாந் துன்ப நீங்கிப்
பரமான இன்பஞ் சேர்வார்.

என்று கூறுகின்றது. அன்றி, மந்திரம் முதலியன முத்தி சாதன மாகா என்பது அச் செய்யுளின் கருத் தன்று.

ஒருவன் வாழ்க்கைக்கு வேண்டிய பல நூல்களைக் கற்கிறான். அது நல்லதே. கற்று, அறிந்து, பொருளீட்டி, உண்டு, உடுத்து வாழ்கின்றான். இவ்வளவுக்கும் வேண்டும் அறிவை அளிப்பன உலக நூல்கள். இவற்றைக் கற்றார், வாழ்க்கையை இனிது நடத்துகின்றனர். ஆனால், அவர்கள் ஆனந்த வாழ்வைப் பெற முடியாது. மனம் அடங்கினாலன்றோ ஆனந்த வாழ்வு உண்டாம்!

சினமடங்கக் கற்றாலும்
சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமடங்கக் கல்லார்க்கு
வாயேன் பராபரமே.

என்பர் தாயுமானவர். மன அடக்கம் பெறுதல் அரிதினும் அரிது. தாயுமானவர் இதனைக் கூறும்போது,

கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்
கரடிவெம் புலிவா யையும்
கட்டலாம் ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்
கட்செவி யெடுத்தாட் டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண் ணலாம்
வேறொருவர் காணாமல் உலகத்து லாவலாம்
விண்ணவரை ஏவல் கொளலாம்
சந்ததமும் இளமையோ டிருக்கலாம் மற்றொரு
சரீரத்தி னும்புகுத லாம்
சலமேல் நடக்கலாம் கனல்மேல் இருக்கலாம்
தன்னிகரில் சித்தி பெறலாம்
சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறமரிது சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே.

என்று கூறுவர். இவ்வாறு ஆனந்த வாழ்வுக்குக் காரணமான மன அமைதியைப் பெற ஒருவன் அறிவு நூல்களைக் கற்க வேண்டும். அறிவு நூல்கள் கடவுள், உயிர், உலகம் இவற்றி னியல்பை ஆராய்ந்து கூறுவன. அவையும் சமய நூல்கள் (Religious Books) என்றும், தத்துவ நூல்கள் (Philosophy) என்றும் இரு வகையாம். அதிக ஆராய்ச்சிக்கு வேண்டும் அறிவாற்றலும், நேரமும் இல்லார் ஏதாவது சமய நூலையே ஓதுவர். அறிவாற்றல் மிக்கவர் சிறிது நேரம் கிடைப்பினும் தத்துவ நூலையே ஓதுவர். யார் எதையேனும் ஓதுக.

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையின் பேதையார் இல்.

என்று வள்ளுவர் அருளியவாறு, ஓதி யுணர்ந்தவர், உணர்ந்த நெறியில் நிற்க முயலாராயின், அறிவில ரென்று உலகத்தால் இகழப்படுவர்.

அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லாது
உலகநூல் ஓதுவ தெல்லாம்—கலகல
கூஉம் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்
போஒம் துணையறிவா ரில். —நாலடியார்.

ஆகையால், நாம் சிறந்த ஒழுக்க முள்ளவர்களாய், ஆசை தீர்ந்து, அடங்கிய மனம் பெற்று, நமக்கென வாழாது பிறர்க்கென வாழும் பெற்றியராய் வாழ்வு நடத்தி, அறிவு நூல் கற்று, அதன் வழி நின்று, தடுமாற்றம் தீர்ந்து, மன அமைதி பெற்று, ஆனந்த வாழ்வு பெறுவோமாக!

[அறிவு நூல்களாகிய வேதாந்த நூல்களில் பஞ்ச கோச விவேகம் கூறப்படுகின்றது. ஈண்டுக் கூறப்பட்ட பஞ்ச கோச வாழ்வுகளுள் மேன்மேல் உயர்ந்த வாழ்வுகளை வாழ விரும்பி முயலாதார் பஞ்ச கோச விவேகம் செய்து ஆத்ம ஞானம் பெறும் ஆற்ற லில்லாதவரே யாவர் என்னும் எமது கருத்தை வெளியிடுவான் வேண்டி, பஞ்ச கோச வாழ்க்கை உரைத்தாம்.]

# பஞ்ச கோச விவேகம்

ஞானம் மோட்ச காரணம். ஆத்மாவை அறிந்தவன் ஆனந்த வடிவமாக நிலைக்கின்றான். ஆத்மா ஆனந்த சொரூபமே. உடல் முதலியவற்றை நானென்று நினைப்பதால் ஆத்மா துன்பத்துக் குள்ளாகின்றது. உடல் நான் என்பது தவறான அறிவு. உடல் நா னன்று. உடலுக்கு வேறாக ஆத்மா உளது. உடல் நான் என்னும் அறிவு இருக்கிறவரை ஆத்மாவை அறிய முடியாது. ஆதலால் உடல் கோசம் எனப்படும். கோசம் - பை - மூடி - மறைப்பது. இவ்வாறு ஐந்து மூடிகள் ஆத்மாவை மூடிக் கொண் டிருக்கின்றன. அவற்றில் ஒவ்வொன்றையும் நான் அன்று என்று அறிந்து நீக்க வேண்டும். நீக்கிய பிறகு ஆத்மா விளங்கும்.

ஒரு பொருளை ஓரிடத்திலிருந்து நீக்க வேண்டுமாயின் அதனைக் கையால் எடுத்து வேறிடத்தில் வைக்கிறோம். உடல் முதலிய பஞ்ச கோசங்களை ஆத்மாவிலிருந்து நீக்க வேண்டுமாயின், அறிவினால் நீக்க வேண்டும். ஏன்? தவறான அறிவினால் (அத்தியாசத்தினால்) உடல் நா னென விளங்குகிறது. "உடலுக்கு வேறான அறிவானந்த வடிவினன் நான்" என்று அறிவதால் உடலை நீக்க முடியும். கன்னன் தவறான அறிவினால் தன்னைத் தேர்ப்பாகன் மகன் என அறிந்தான்; துக்கப்பட்டான். குந்திதேவி, "நீ என் மகன் பஞ்சவர்க்கும் மூத்தவன்" என்று உணர்த்தியபோது, கன்னன், "நான் அரச குலத்தில் பிறந்தவன்" என்று அறிந்தான்; ஆனந்தக் கடலில் மூழ்கித் திளைத்தான். அவன், அறிவினால், தேர்ப்பாகனா யிருப்பதைத் தள்ளிவிட்டு, அரச னானான். நாமும் அறிவினால், "உடல் நான் அன்று" என்று நீக்கிவிட்டு, ஆத்மாவின் உண்மை வடிவை உணர வேண்டும். இவ்வாறு, உடல் முதலிய ஐந்து கோசங்களையும் அறிவினால் அறிந்து நீக்குவதையே அறிவு நூல்கள் பஞ்ச கோச விவேகம் என்று கூறும்.

பஞ்ச கோச விவேகம் தைத்ரீய உபநிஷத்தில் பிருகு வல்லி என்னும் மூன்ருவது அத்தியாயத்தில் சுருக்கமாகப் பேசப்படுகிறது. அதனை நாம் விரிவாக ஆராய்வாம்.

பிருகு, வருணர் என்னும் தம் தந்தையை அடைந்து, "அப்பா! எனக்குப் பிரம்மத்தை உபதேசியுங்கள்" என்று வேண்டினுர். உள்ள பொருள், தத்துவம், மெய்ப் பொருள், செம் பொருள் என்னும் பெயர்களால் வழங்கப் படும் உண்மைப் பொருள் உபநிடதங்களில் பிரம்மம் என்னும் பெயரால் வழங்கப்படும். எனவே பிருகு மெய்ப் பொருளைப்பற்றி வினவினுர். காணப்படுவன வெல்லாம் மெய்ப் பொருளா யிருக்க, மெய்ப் பொருளைப்பற்றி வின வினுர் என்ப தென்னை எனின், ஆராயாதார்க்கு மெய்ப் பொருளாகத் தோன்றுவது, ஆராய்பவர்க்குப் பொய்ப் பொருளாய் விடுவதைக் காண்கின்ருே மாதலின், ஆராய் வான் தலைப்பட்ட பிருகு வினவினுர்.

பிருகுவின் தந்தை, "அன்னம், பிராணன், கண், காது, மனம், வாக் இவை பிரம்மத்தை அறியும் சாதனங் கள்" என்று கூறி, பிரம்மம் எத்தகையது என்றும் கூறி னுர். "எதிலிருந்து இவ்வெல்லாப் பிராணிகளும் உண்டா கின்றனவோ, எதில் இவை யெல்லாம் ஜீவித்திருக்கின்ற னவோ, எதில் இவை ஒடுங்குகின்றனவோ, அதை அறிந்து கொள். அது பிரம்மம்" (தைத்ரீயம்: பிருகு வல்லி—1.) என்று சொன்னுர். ஆம் அதில் எல்லாம் அடங்கியிருக் கிறது. உலகம் முழுதும் அதில்தான் நிலைத்திருக்கிறது. பாரமார்த்திகமான உண்மைப் பொருள் அதுவே. அதில் தான் நாம் இருந்து வாழ்கிருேம். உலகம் அதில் அடக் கம். அதற்குப் புறம்பாக எதுவு மில்லை.

பிருகு தவம் செய்தார். தவம் என்பது ஐண்டுப் பஞ் சேந்திரியங்களையும் மனத்தையும் அடக்கி ஒரு பொருளைச் சிந்தித்தல். இவ்வித தவத்தால்தான் ஒன்றை அறிய முடி யும். தலை கீழாக நிற்பது தவமாக இருக்கலாம். ஆனுல் தலை கீழாக நின்று எதையாவது அறிய முடியுமா? பல

னில் விருப் பின்றிக் கடமைகளையும் நல்ல செயல்களையும் செய்தலாகிய கர்ம யோகம் மனத்தைச் சுத்தப்படுத்தும். கடவுளை வழிபடுவதாகிய பக்தி யோகம் மன அமைதியைத் தரும். ஆனால் இவ்வாறு சுத்தமும் அமைதியும் பெற்ற மனத்தால் தியானித்தே - நுட்பமாக ஆராய்ந்தே - ஒரு பொருளை அறிய முடியும். ஆதலினாற்றான் சங்கரரை ஒட்டி வள்ளுவரும்,

> ஓர்த்துஉள்ளது உள்ளம் உணரின் ஒருதலையாப்
> பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

என்று ஆராய்ச்சியினால் உண்டாகும் அறிவையே மோட்ச சாதனமாகக் கூறினார்.

தந்தையார் முதலில் அன்னத்தைக் கூறினார். அன்னம் உணவு. அதையே பஞ்சபூதத் தொகுதி, உலகம் என்று கொள்க. அன்னம் என்றால் உலகம் என்பதா? ஆம். "உணவெனப் படுவது நிலத்தொடு நீரே"—புறநானூறு 18. மண்ணும் தண்ணீரும் தானே உணவாகின்றன! சைவர் கூறும் "பதி, பசு, பாசம்", வைணவர் கூறும் "ஈஸ்வரன், சித், அசித்", அத்வைதிகள் கூறும் "ஈஸ்வரன், சிவன், சகத்" என்பவற்றில், பாசம், அசித், சகத் என்னும் சொற்களால் கூறப்படும் உலகு, ஈண்டு அன்னம் என்னும் சொல்லால் கூறப்படுகிறது. இவற்றை மேலை நாட்டார், God, life and matter என்ப. ஆழ்ந்து சிந்திக்காமல் பார்ப்பவருக்கு உலகம் - இயற்கைப் பொருள் - பஞ்சபூதத் தொகுதிதான் - தெரிகிறது. பஞ்சபூத காரியமாகிய இயற்கைப் பொருளிலிருந்துதான் உயிர்கள் உண்டாகின்றன; அவை அதில் வாழ்கின்றன; இறுதியில் அதிலேயே ஒடுங்குகின்றன. அன்னத்தினால்தான் உடல் உண்டாயிற்று. தந்தையின் சுக்கிலமும் தாயின் சோணிதமும் அன்னசாரத்தின் சாரம் அன்றோ! அன்னத்தினால்தான் உடல் வளர்கிறது. சாப்பிட்டால்தானே உடல் வளர்கிறது. இறந்த பிறகு சுட்டாலும், புதைத்தாலும், சும்மா விட்டாலும் உடல் அன்னமாகிய பஞ்சபூதத்தில் கலந்து

விடுகிறது. பிருகுவும் அவ்வாறே துணிந்தார். "அன்னம் பிரம்மம். அன்னத்திலேயே இவ் வெல்லா உயிர்களும் தோன்றி நின்று ஒடுங்குகின்றன" (தைத்ரீயம் : பிருகு வல்லி—2.) என்று அவர் அறிந்தார்.

ஆனால் பிருகுவுக்குத் திருப்தி ஏற்பட வில்லை. ஆராய்ச்சியாளர் ஓர் உண்மையைக் கண்டுபிடிப்பர். அதில் அப்போது திருப்தி கொள்வர். தாம் கண்டுபிடித்த உண்மையில் குறை தோன்றும்போது, அதனை உண்மையல்ல என்று தள்ளி மேலும் ஆராய்வர். வேறொரு உண்மையைக் கண்டுபிடிப்பர். இப்படி உண்மையிலிருந்து உண்மைக்குப் போய்க்கொண் டிருப்பதுதான் ஆராய்ச்சி. பிராணன் போய்விட்டால் உடல் அழுகி நாறுகிறது. உலகத்துப் பொருள்கள் அழிகின்றன. உலகமே அழிந்துதான் போகும். அழிவது பிரம்ம மாகுமா? என்று சந்தேகம் உண்டாயிற்று. பிருகு மறுபடி பிதாவை அடைந்து உபதேசிக்கும்படி கேட்டார். தந்தை வருணர், "தவம் செய்து அறி" என்று உத்தரவிட்டார்.

பிருகு மனத்தை ஒருமுகப்படுத்தி ஆராய்ந்தார். எது போனால் உடல் அழிகிறது? பிராணன் போனால் உடல் அழிகிறது. பிராணன் இருக்கும்வரை உடல் நன்றாய் இருக்கிறது. பிராணன் இல்லாது உடல் உண்டாவதில்லை. உடல் அழிந்த பிறகும் பிராணன் இருக்கிறது. பிராணன் விந்துவோடு கர்ப்பத்தில் சென்று கருவாயிற்று; கருவை வளர்த்தது. பிராணன் இன்றி விந்து செல்லுமா? விந்துவில் பிராணன் இருக்கிறது. பிராணனால் உடல் நிற்கிறது. உடலால் பிராணன் நிற்க வில்லை. "பிராணன் பிரம்மம். பிராணனிலிருந்து எல்லாம் உண்டாகின்றன. அதில் எல்லாம் நிலைத்திருக்கின்றன. அதில் எல்லாம் அழிந்து ஒடுங்குகின்றன" (தைத்ரீயம் : பிருகுவல்லி—3.) என்று அவர் தீர்மானித்தார்.

வெற்றிலை, பாக்கு, சுண்ணம்பு மூன்றும் சேர்ந்த போது செம்மை நிறம் தோன்றுவது போல பஞ்ச பூதச்

சேர்க்கையாகிய உடலில் உயிர் தோன்றுகிறது என்று கொள்வது ஆராய்ச்சி யில்லார் கூற்று. இல்லது தோன்ருது. மேலும் மனித தேகத்திலும் ஐம்பொறி யுணர்வும் மன உணர்வும் இருத்தலின் உயிரின் இருப்பு விளங்கித் தோன்றுகிறது. ஐயறிவு பெற்ற மிருகம் முதல் ஓரறிவு பெற்ற புல் மரம் வரை உயிரின் இருப்பு குறைந்து தோன்றுகிறது. மனிதன் மிருகம், பறவை, புழு, மரம், புல் முதலிய உடல்களில் உயிர் இருப்பது விளங்குகிறது. கல்லில் உயி ரிருப்பதாகவே தெரிய வில்லை. ஆயினும் ஆராய்ச்சியாளர் கல்லிலும், மலையிலும் உயிருண்டு என்று கூறுகிருர்கள். இக் காலத்து விஞ்ஞான ஆராய்ச்சி சிறிது உடையார்க்கும், "உயி ரில்லாத இடம் இல்லை. உயி ரில்லாத பொருள் இல்லை. அணுவிலும் உயிர் உண்டு. ஆண்டும் விரைந்த அசைவு காணப்படுதலின்" என்னும் உண்மைகள் புலப்படும்: உடலில் உயிர் இருக்கிறது. உயிர் உடல் அன்று. உயிரால் உடல் அழியாமல் இருக்கிறது. உயிருக்கு உபயோகப்படுவதற்கு உடலும், உடலுக்குப் புறத்தே உள்ள பொருள்களும் உள்ளன. அன்னம் உண்ணப்படுவது - உபயோகப்படுத்தப்படுவது. உலகம் யாவும் உயிருக்கு அன்னம். உயிரை எதிர்த்து, வருத்தி, அழிக்கும் பொருளாக உலகம் இல்லை. உயிரை வளர்ப்பதாக, உயிருக்கு உதவுவதாக, உலக முளது.

எனினும், பிருகு திருப்தி யடைய வில்லை. உயிர் உலகை அறிந்து பயன்படுத்திக் கொள்ள வேண்டி யிருக்கிறது. ஒருவன் தன் உடலுக்கு வேண்டுவதை அறிந்து அளவாக உண்கின்ருன். உணவு சீரணமாகி, உடல் வளர்ந்து, சுகம் விளைகிறது. வேருெருவன் அறியாது அதிகம் உண்கின்ருன். வயிற்று நோய் வருகிறது. மூடனை உலகம் அமிழ்த்தி விடுகிறது; அழித்து விடுகிறது. அறிவாளிக்கு உலகம் அடிமையாகிப் பணியாற்றுகிறது; பயன் படுகிறது; இன்பந் தருகிறது. மூடன் உலகைக் கண்டு அஞ்சுகிருன். அறிவாளி உலகத்தை அனுபவிக்கிருன். உயிர் - பிராணன் - மூடம்தானே. பிராணன் எங்ஙனம்

பிரம்ம மாகும்? பிருகு மறுபடி தந்தையைச் சரணடைந்தார். தந்தை முன்போல், "தவஞ் செய்து அறி" என்று உபதேசித்தார்.

பிருகு மன ஒருமையோடு ஆராய்ந்தார். பிராணனுக்கு வேருக நினைத்து அறியும் அறிவு இருக்கிறதென்பது விளங்குகிறது. அது பிராணனில் அடங்காது அது மனம். "மனம் பிரம்மம். மனத்திலிருந்து இவை உண்டாயின; மனத்தில் நிலைபெற்றிருக்கின்றன; மனத்தில் ஒடுங்குகின்றன" (தைத்ரீயம்: பிருகுவல்லி—4.) என்று அறிந்தார். இந்த மனம் ஐந்து பொறிகளால் உலகத்துப் பொருள்களை அறிகிறது; விருப்பு, வெறுப்பு, ஆசை, கோபம் முதலிய எழுச்சிகளை உடையதாகின்றது. உடலுக்கு உயிர் எப்படியோ அப்படி உயிருக்கு மனம் விளங்குகிறது. மனம் உயிருக்கு ஆத்மா. மனம் உடலால் அல்லது உயிரால் உண்டானதன்று. அவற்றிற்கு மேலாய் அவற்றிற்கு உள்ளே இருப்பது. உடற் பயிற்சியினுல் உண்டாகும் உடல் வலிமையால் பிராணன் வலிமை பெறுகிறது எனினும், பிராணன் உடலுக்கு மேலான பொருளே. மனத்தை நிறுத்துவதற்குப் பிராணனை நிறுத்துதல் (பிராணுயாமம்) சிறந்த சாதனமாகச் சொல்லப்படுகிறது. அது உண்மையே. மனம் பிராணன் அசைந்தால் அசைவதாயும் பிராணன் நின்ருல் நிற்பதாயும் காணப்படினும் பிராணனிலும் மனம் மேலானதே. உண்மையில் மனம் தான் பிராணன் முதலிய எல்லாவற்றையும் இயக்குகிறது. பஞ்ச பூதங்கள் உணவு ரூபமாக உடலை வளர்க்கும்போது பிராணனையும் மனத்தையும் வளர்க்கின்றன.

ஒருகூறு மலமாகும் ஒருகூறுடலாம்
ஒருகூறு மனமாகும் உண்டற்ற அன்னம்.

—சசிவன்ன போதம்.

ஆனுல் பஞ்ச பூதமாகிய உடலுக்கு உட்பட்டிருக்கும் போது, பிராண சக்தி மட்டாய் இருப்பதையும், பிராணன்

உடலை ஆளும்போது - அபானனது சக்தியை வென்று நிற்கும்போது - பிராண சக்தி மிகமிக அதிகமாகிறது என்பதையும் சிறிய அளவில் யோகம் பயில்பவரும் அறிவர். அங்ஙனமே மனமும், உடலுக்கும் பிராணனுக்கும் கட்டுப்பட்டு நிற்கும்போது - ஐம்புல இன்பங்களை அனுபவிப்பதே தனக்குத் தொழிலாகக் கொள்ளும்போது - அற்ப சக்தி யுடைய தாகிறது. உடலையும் பிராணனையும் அடக்கி - பொறிவாயில் ஐந்தவித்து - மேம்பட்டு விளங்கும் யோகியின் மனம், இருந்த இடத்திலிருந்தே ஆயிரக் கணக்கான மைல்களுக் கப்பால் நிகழும் நிகழ்ச்சிகளை அறிதல், இயற்கையின் வலிய சக்திகளையும் கட்டுப்படுத்துதல் முதலிய அரிய அமானுஷிகமான சக்திகளை உடைய தாகின்றது. "சுரைக்காய்ச் சுவாமிகளை ரெயிலைவிட்டு இறக்கிவிட்டார்கள்; ரெயில் நின்றுவிட்டது; அவர் யோக சக்தியால் ரெயில் நிறுத்தப்பட்டதென்று அறிந்து அவரிடம் மன்னிப்புக்கேட்டு அவரை ரெயிலில் ஏற்றினார்கள். அவர், "போ" என்று சொன்னதும் ரெயில் போகத் தொடங்கியது என்பது அவர் சரித்திரத்தில் எழுதப்பட்டுள்ளது. இன்னோரன்ன பல அரிய செயல்களை இப்போதும் சில யோகிகள் செய்துகொண் டிருக்கின்றனர். இவை மனத்தின் - உடலையும் பிராணனையும் ஆட்கொண்டெழும் வன்மை பெற்றுச் சிறந்த மனத்தின் - பெருமைகளாம். இதனால் அன்னத்தைவிட பிராணனும், அவ்விரண்டைவிட மனமும் உயர்ந்து விளங்குகின்றன என்பது நன்கு விளங்குகின்றது.

பிருகு இதிலும் திருப்தி யடைய வில்லை. மனம் உயர்ந்த பொருளாயின் மிருகங்களும் உயர்ந்து விளங்க வேண்டும். மிருகங்கள் வீடு கட்டி வாழ வில்லை; ஆடை உடுத்தி வாழ வில்லை; தமக்குக் கோடிக்கணக்கான மைல்களுக்கப்பா லுள்ள விண்மீன்களைப்பற்றி வான சாஸ்திரம் படிக்க வில்லை; புகைவண்டி, கப்பல், வானவூர்திகளைக் கண்டுபிடித்து உலகை வலம்வர வில்லை; சட்டங்களை வகுத்துக்கொண்டு வாழ்க்கை நடத்த வில்லை. பாவம்,

புண்ணியம், கடவுள்கொள்கை முதலியன அவற்றுக் கில்லை. அவை உண்டு, உறங்கி, இனம் பெருக்கி வாழ்கின்றன. மனிதன் வாழ்வு மிருக வாழ்வுக்குச் சமமா யிருந்தால், பிருகு ஒருவேளை "மனம் பிரம்மம்" என்பதோடு திருப்தி யடைந்திருப்பர். மிருகங்களுக் கிருக்கும் மனம் அவ்வப்போது இயற்கை உணர்வால் (instinct) தூண்டப்பட்டு ஐம்புலன்கள் மூலம் உலகத்துப் பொருள்களைச் சிறிதே அறிய உதவுகிறது. மனிதனுடைய மனமோ! அம்மம்ம! வானத்தை ஊடுருவிக் கண்ணுக் கெட்டாத வற்றை யெல்லாம் அறிய முயல்கின்றது. பூமியின் நடுவெங்கும் புகுந்து பார்க்க விரும்புகின்றது. அணுவினுள்ளும் புகுந்து பார்க்கும் புத்தியன்றோ அணுகுண்டைச் செய்தது. இறந்த காலத்தை அறிய முயல்கின்றது. எதிர் காலத்தைப் பார்க்க விரும்புகிறது. எத்தனை சாத்திரங்கள் ! கல்வி கரை இல. இவற்றை யெல்லாம் செய்வது மனமா ? மனம் அறிவது மாத்திரம் செய்யும். ஆராயும் சக்தி யுடையது மனமா? மனமாயின் அச் சக்தி யுடைய மனத்துக்கு வேறு பெயர் கொடுக்க வேண்டும். மனம் பிரம்ம மன்று. அதற்கும் மேலான ஒன்று இருப்பதாகத் தெரிகிறதே ! என்று நினைத்து அமைதி கொள்ளாமல் பிருகு தந்தையை அடைந்தார். தந்தை முன் போல், "தவம் செய்" என்றே வழி காட்டினர்.

பிருகு ஆராய்ந்தார். பொருள்களை அறிவது வேறு; ஆராய்வது வேறு. ஆராயும் அறிவினுலேயே மனிதன் உயிர்களுக்குள் தலைமை பெற்று விளங்குகின்றுன். ஆராயும் அறிவு மன மன்று. அது புத்தி என்னும் விஞ்ஞானம். "விஞ்ஞானம் பிரம்மம். விஞ்ஞானத்திலிருந்தே இவை உண்டாகின்றன; விஞ்ஞானத்தில் இருக்கின்றன; விஞ்ஞானத்தில் ஒடுங்குகின்றன" (தைத்ரீயம்: பிருகு வல்லி—5.) என்று அவர் அறிந்தார். மனமும் புத்தியும் ஒத்துழைக்கும்போது மனிதன் சிறந்த நிலையை அடைகின்றுன். மனம் இந்திரியங்களோடு இயைந்து வாழ்வு நடாத்துகிறது. புத்தி சம்பந்தப்படாதபோது அவ் வாழ்வு

மிருக வாழ்வுபோல் தாழ்ந்த தாகின்றது. வாழ்வை நடத்தும் மனத்தோடு புத்தி ஒத்துழைக்கும்போது மனிதன் வாழ்வு சிறக்கின்றது; மேல் நிலை அடைகின்றது. ஆகையால்தான் விஞ்ஞானம் மனத்துக்கு ஆத்மாவாய் விளங்குகிறது (தைத்ரீயம் : பிரம்மானந்தவல்லி—4.) என்று உபநிஷத்து கூறுகின்றது. மனத்தோடு சம்பந்தப்படாத புத்தியின் ஆராய்ச்சி சாரத்தை விட்டுச் சக்கையை மெல்லுவதாம். காவ்யம், நாடகம், தர்க்கம், தர்ம சாத்திரம் இவற்றின் ஆராய்ச்சி வாழ்க்கையோடு இயையாத போது என்ன பயனும். ஒருவன், "இராமன் கருணை உடையவன்; இன்சொல் வழங்குபவன்" என்று சொற்பொழிவாற்றித் தன் வாழ்வில் கருணையும் இன்சொல்லும் இல்லாதவனாயின், அது குறள் படித்துக் குட்டிச் சுவரானதாகாதா? வாழ்க்கையோடு இயையாத புத்தி பயனில்லாதது என்பதைத்தானே வள்ளுவர்,

அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்நோய்போற் போற்றாக் கடை.

என்று கூறினார். வாழ்க்கையோடு தொடர்பில்லாத எதுதான் பயனுடையது ஆகும்?

இல்லானுக் கன்பிங் கிடம்பொருள் ஏவல்மற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்யும்—நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு. —நன்னெறி.

புத்தி புதிதாக ஒன்றைப் படைத்துவிட வில்லை. உலகப் பொருள்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒவ்வொன்றுக்கும் மாறாத குணங்கள் சில இருக்கின்றன. அவற்றிடையே ஒரு ஒழுங்கு உண்டு. புத்தி இவற்றை எல்லாம் ஆராய்ந்து தெரிந்துகொண்டு பெரும் பயன் விளைக்கிறது. புத்தியினால் கலை, ஒழுக்கம், வேதாந்த ஆராய்ச்சி நிகழ்கின்றன. வாழ்க்கையோடு இயைபில்லாத போது அவை வீண் என்பது மாத்திரம் அன்று; அவை

மனிதனை வீழ்த்துவனவும் ஆம். மாணவன் இசை நடனங்களில் ஈடுபடுவது கலையை அனுபவிப்பதா? கலாசாலைகளில் மாணவன் கற்பன வெல்லாம் கலையன்றோ? புலன்களை ஈர்த்து இன்புறுத்துங் கலை, கலைகளில் உயர்ந்ததோ?

இருமல் நோய் உடையவன் அதிகாலையில் எழுந்து குளிர் நீரில் குளிப்பது ஒழுக்கம் எனக் கொள்ளப் படுமா? ஒழுக்கம் உடலுக்கும் உளத்துக்கும் நலம் புரியாததாகவும் இருக்குமோ? கண்மூடிக் கட்டளைகளை ஏற்று நடப்பதே ஒழுக்கமோ?

கூடா ஒழுக்க முடையவன் வேதாந்த ஆராய்ச்சி நடத்துவது வேதாந்தம் என்று போற்றப்படுமோ? மன மடங்கக் கல்லார்க்கு வேதாந்தம் என்ன பயன்? வாய்ப் பந்தல் இடுவதே வேதாந்தமோ? தான் புத்திசாலி என்று நினைத்துக்கொண்டே இருந்து ஏமாந்த மூடர்கள் எத்தனை பேர்? வாழ்க்கையில் வீழ்ச்சி யடைந்தபின் இவர்கள் தம் மடமையை உணர்ந்தென் பயன்? ஆசை வாழ்க்கை வாழ்ந்தவன், அறிவு வாழ்க்கை வாழ முயலும்போது எத்தனையோ ஏமாற்றங்களைக் கடக்க வேண்டும் என்பதனு லன்றோ அம் முயற்சி நெருப்பாற்றை மயிர்ப் பாலங் கொண்டு கடப்ப தொக்கும் என்று அறிஞர் கூறுவா ராயினர்.

பௌதிக விஞ்ஞானம் மலிந்த இஞ்ஞான்று, பஞ்ச பூதம் முதலிய வெளிப் பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சியே விஞ்ஞானம் என்ற கருத்துத் தோன்றுகிறது- நீராவியால் இயந்திரங்களைச் செலுத்துவது முதல் ஆகாய விமானம் வரை மனிதவாழ்க்கைக்குப் பயன்படத்தக்க எத்தனையோ கருவிகளைக் கண்டு உதவிய அவர்கள் சிறந்த விஞ்ஞானிகள் என்பதையும் அவர்கள் மனத்தைப் பொறி வழிச் செல்லாது நிறுத்திப் பேராராய்ச்சிநடத்தி உதவினர் என்பதையும் எவரே மறுப்பர். ஆனல், அகிம்சை, சத்தியம் முதலியவற்றை மேற்கொண்டு ஆயுத பலத்தோடு கூடிய பேரரசை எதிர்க்க முடியும் என்று கண்டறிந்து,

நாட்டுப்பற் றொன்றே சம்பளமாகக் கொண்டு, இலட்சக் கணக்கான மக்கள் போர் வீரர்களாகத் திகழ்ந்து போரிட்டு வெல்ல வழி வகுத்த இரஷ்ய ஞானி லியோ டால்ஸ்டாயும், மகாத்மா காந்தி யடிகளும் ஆராய்ச்சி நடத்திய விஞ்ஞானி கள் அல்லரோ! சமூகம், அரசியல், மனித வாழ்வு, மனம் முதலிய எதுபற்றி ஆராய்ந்தாலும் அது விஞ்ஞானமே. உணர்ச்சிவழி ஒழுகும் மனிதன் - இது செய்ய வேண்டும் என்று தோன்றினால் அதனைச் செய்து வாழ்க்கை நடத்து பவன் - மனிதரில் தாழ்ந்தவன். தான் செய்யும் ஒவ்வொரு செயலையும் ஆராய்ந்தே செய்து, இன்னும் செய்யத்தக்கன யாவை என்று ஆராய்ந்து, தன் வாழ்க்கையில் ஆராய்ச்சி செலுத்துபவன்,

> எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
> எண்ணுவம் என்ப திழுக்கு.

என்னும் திருக் குறளுக்கு இலக்கியமாக விளங்குபவன். இவன் வாழ்க்கை ஆராய்ச்சி விஞ்ஞானி; மக்களில் தேவ னாக மதிக்கப்படுபவன்; பௌதிக விஞ்ஞானிகளை விட உயர்ந்தவன்; வாழ்க்கையில் பிறர்க்கு வழிகாட்டியாக விளங்குபவன். இவ்வாறு ஒவ்வொரு மனிதனும் விஞ் ஞானியாக விளங்க முடியும். விஞ்ஞானம் மனித வாழ்வை வளப்படுத்துகிறது; மனிதனை உயர்த்துகிறது.

"ஜீவன் தலைவன்; புத்தி சாரதி; மனம் கடிவாளம் இந்திரியங்கள் குதிரைகள்; உடல் தேர்" என்று வருணிக் கும் உபநிஷத்துக்களுக்கும், அற நூல்களுக்கும் கூட, "புத்தி வாழ்க்கையை நடத்தவேண்டும்; புத்தியின் வழி வாழ்க்கை நடக்க வேண்டும்; அப்போது வாழ்க்கைத் தேர்ப் பயணம் இனிது முடியும்" என்பதே கருத்தன்றோ!

ஆயினும் பிருகுவின் மனம் திருப்தி யடைய வில்லை. விஞ்ஞான வாழ்க்கை நல்லது தான். ஆனால் விஞ்ஞானி யும் புலன்கள்மூலம் தான் இன்பம் பெறுகிறான். இன்பம் பெறுவதுதான் முடிவான நோக்கம் எனின் விஞ்ஞானமும் வேண்டாம் போல் தோன்றுகிறது. அளவுக்கு மிஞ்சினால்

அமுதமும் நஞ்சாம். மனம் எதிலும் அளவுக்கு மிஞ்சியும் போய்விடும். அறிவு அதன் அறியாமையை அதற்கு உணர்த்தி அது கவிழ்ந்து போகாமல் காப்பாற்றும்.

ஆசைபல அருந்துயருக் கடிப்பீடம் என்பாய்
 யாதுவந்தும் அடங்காதே யார்கொடுப்பார் என்பாய்
காசைநாம் தேடினமோ நமையதுதே டிற்ருே
 கடற்கரையிற் புரண்டாலுங் களேபரங்கொண் டதுவே
தூசதிகம் ஒட்டாதென்று எவரிடத்தும் புகல்வாய்
 துரும்பளவா சையும்விட்டுத் துணிவமெனத் துணியாய்
வேசையர்க ளாசையொக்க நேசம்வைப்பாய் சிவன்மேல்
 வெளிவேடம் பரமசுகம் விளைத்திடுமோ நெஞ்சே.

பெண்ணுசை யாலழிந்த பேர்கள்தமைக் கண்டாய்
 பெரும்பா ரதக்கதை இராமர்கதை யறிவாய்
எண்ணும லவர்பிறகே நாயதுபோ லலைவாய்
 இருந்தபொருள் ஈந்துலகர் ஏசிடவாய் அறுவாய்
புண்ணுதி தரவழிந்தாய் வைத்தியர்பின் பற்றிப்
 பொருள்கொடுத்துவாய்ப்பற்கள் போமருந்தையுண்டாய்
மண்ணுவா ராசைகன விலும்விரும்பே னென்ருய்
 மறுத்தவர்வாயிலைக்காப்பாய் மருந்துனக்கென் நெஞ்சே!

—அநுபவாநந்த தீபிகை : முதல் பாகம்.

என்பதுபோல் நூற்றுக்கணக்கான - ஆயிரக்கணக்கான - புத்திமதிகள் விஞ்ஞானம் மனத்துக்கு உணர்த்தும் அறிவுரைகள் அன்ருே! விஞ்ஞானம் மனத்தைத் தன்ஞேடு இழுத்துக்கொண்டு போய்விட்டால், புலன்கள் தம் கொட்டம் அடங்கி ஒருவாறு தம் செயல்களைச் செய்து கொண் டிருக்கின்றன. வைப்பாட்டியின் பின்ஞல் செல்லு மாறு கணவனைப் பறிகொடுத்த கற்புடைய மகளிர் கதியை அவை அடைகின்றன. கற்புடைய மகளிர்க்குக் கணவனே அன்ருே அனைத்தும்! புலன்களுக்கு, மனம் தம் வழி வரும்போ தன்ருே கொண்டாட்டம்.

மனிதன் அறிவு நல்ல வழிகளில் சென்று தொழி லாற்றுமாஞல் அவன் மனிதரில் - ஜீவராசிகளில் - உயர்ந்

தவன் என்பதில் ஐயமில்லை. ஆனால் மனிதன் அறிவு வேறு வழிகளிலும் வேலை செய்கிறது. தான் வேறு மற்ற உயிர்கள் வேறு என்ற வேற்றுமை உணர்ச்சி எல்லார்க்குமே இருக்கிறது. இது தான் அறிவு நூல்களில் துவைதம் எனப்படுகிறது. இஃது ஓரளவு உண்மைதான். இவ்வறிவை ஆதாரமாகக் கொண்டே உண்ணல், நடத்தல், முதலிய எல்லா வியவகாரங்களும் நடக்கின்றன. ஆதலால் இந்த உண்மைக்கு வியவகார சத்யம் என்ற பெயரைக் கொடுத்தார் சங்கரர். ஆனால், இது பாரமார்த்திக சத்யம் (முடிவான உண்மை) அன்று. நிற்க, இந்த வேற்றுமை உணர்ச்சியால், "தான் மற்றவர்களினும் வேறாயிருப்பதால், யார் எப்படிப் போனாலும் தான் இன்புற வேண்டும்; தனக்கே எல்லாம் வேண்டும்; பிறர் கெட்டாலும் தான் வாழவேண்டும்" என்ற எண்ணம் சிலர்க்கு உண்டாகிவிடுகிறது. இவ்வுணர்ச்சி யுடையவர்களைத் தான் புராண கதைகள், அசுரர்கள் - கெட்டவர்கள் - என்று வருணிக்கின்றன. இவ் வியல்புடைய மனிதர் பலர் இருப்பதால் இவ் வுலகம் உண்மையில் நரகமாகவே ஆய் விடுகிறது.

உலகம் நல்லவர் நிறைந்ததாக இருப்பதாகவே வைத்துக் கொள்வோம். வெள்ளம், நெருப்பு, பூகம்பம், இடி இவை மனிதனைப் பார்த்து, "நீ எம்மாத்திரம்!" என்று சவால் விடுகின்றன. மனிதன் அஞ்சி ஒடுங்கி நிர்ச்சீவனாய் நிற்கிறான். இயற்கையின் வலிய, கருணை யற்ற, சக்திகளுக் கெதிரில் மனிதன் ஒன்றும் செய்ய முடியாது ஏங்கி நிற்கும் நிலை இரங்கத் தக்கதே. இயற்கை எதையாவது செய்யட்டும் என்று வீரம் பேசலாம். நசுங்கி அழிவதில் வீரமும் இல்லை, தியாகமும் இல்லை. இவை யெல்லாம் நேர வில்லை. சந்தோஷமாகப் பிள்ளை குட்டிகளுடன் வாழ்கின்றான். இயமன் வந்து யாரையாவது கொண்டுபோய் விடுகிறான். ஒரு புது பயங்கரமான உண்மையை உணர வேண்டி யிருக்கிறது. "எவ்வளவு (நேர்ந்த) நல்ல வேலையை ஆரம்பித்துச் செய்துகொண் டிருந்தாலும் திடீரென்று

KOVILOOR 630 307 (NEAR) KARAIKUDI

அதை விட்டுச் செல்லவேண்டியவன் தானே நான்? முடித்த பிறகே இறப்பேன் என்ற திடம் உண்டா?" என்னும் எண்ணம் எந்த மனிதன் மனத்தைத் தாக்க வில்லை? "ஏன் நல்ல வேலையை நான் செய்ய வேண்டும்? கடவுள் ஒருவர் இருந்தால் அவர் செய்யட்டும். நான் நாளை வாழ்வது நிச்சய மில்லை எனில் நான் ஏன் ஏதாவது தொடங்க வேண்டும்?" என்றும் தோன்றுகிறது. எந்த அன்புடையார் என்னைப் பிரியாமல் இருப்பர்? அல்லது நான் அவரைப் பிரியாமல் இருப்பேனு? "என்ன வாழ்வு-இந்த வாழ்வு வேண்டாம்" என்று இராமனுக்கும் தோன்றியது. லியோ டால்ஸ்டாய்க்கும் தோன்றியது-எண்ணிலார்க்கு இவ் வெண்ணம் தோன்றுகிறது. இது பலவாகக் காட்சியளிக்கும் இவ் வுலகத்தின் பெருமை-துவைதாத் பயம் பவதி (இரண்டாவது பொருள் இருப்பதனுல் துன்பம் உண்டாகிறது).

"நான் கண்ணுல் காணும் இவ் வெல்லாவற்றுக்கும் தலைவன்" (I am the monarch of all I survey.) என்று ராபின்சன் குருசோ சொன்னது போல் திருப்தியாகச் சொல்லவேண்டும் என்று தோன்றுகிறது. ஆனுல் அவன் மக்கள் வாசம் அற்ற காட்டில் அன்ரோ அங்ஙனம் சொல்ல முடிந்தது. மக்கள் உலகத்தில் அரசனுக்கும் தலைவனுக்குமே ஆபத்துக் காத்திருக்கிறது. அமெரிக்க ஜனுதிபதி ஆப்ரஹாம் லிங்கன் சுட்டுக் கொல்லப்பட்டார். அன்பைப் பரப்பி இந்தியாவின் முடிசூடா மன்னராக விளங்கிய மகாத்மா காந்தி யடிகளும் சுட்டுக் கொல்லப் பட்டார். எந்தத் தேச சரித்திரமும் அரசர்கள் ஆபத்தையே தெரிவிக்கிறது! இரண்டாவது உலக மகா யுத்தத்துக்குப் பிறகு முடி துறந்து ஓடும் அரசரையும் துரத்திப் பிடித்துக் கொன்ற கதை கேட்டிருக்கிரோம்.

முத்தியிலும் மும் முதலும் (பதி, பசு, பாசம்) உண்டு என்று கூறும் அழுத்தமான துவைத உண்மை உடையாரும் சிவனேடு அபேத பாவத்தை அடைந்து

பாசத்தின் கொடுமையில் இருந்து தப்பவேண்டி யிருக்கிறது. பூனைக்குப் பயப்படும் குழந்தை தாயின் முன்றானைக்குள் ஒளிந்துகொள்கிறது. உலகும் உயிரும் ஈசனுக்கு உடல் என்று விசிட்டாத்வைதம் கூறுகிறது. "அது நீ. பரம்பொருள் தான் நீ" என்பது அத்வைதம். இவ் வுண்மைகளில் எதுவும் விஞ்ஞானத்துக்கு - மட்டான அறிவுக்கு - துவைத உலகில் விளையாடும் அறிவுக்கு - எட்டுவதாக இல்லை. எட்டாத அறிவு, "இஃது ஏட்டுச் சுரைக் காயோ?" என்றும் நினைக்கிறது. இன்பமாகவே இருக்க எல்லார்க்கும் விருப்பம். தனித்துத்தனித்து அநேகமாக விளங்கும் சீவர்களுக்கு அது கிடைப்பதாய் இல்லை. எவ்வளவு கஷ்டப்பட்டு முயன்றாலும் துவைத உலகம் பயத்தையே தருகிறது. அபயந் தர வில்லை.

பார்த்த இடமெங்கும் பரமன்காண் அம்மானை
பாராமல் இந்நாளும் பாழ்பட்டேன் அம்மானை.

—பட்டினத்தார்.

எல்லாரையும் போல் பாழ்பட்டநிலையில் ஒரு காலத்திருந்த இப் பக்தர் - அல்லது ஞானி - எங்கும் பரம் பொருளைக் கண்டு, வேற்றுமைக் காட்சி ஒழிந்து, ஒற்றுமைக் காட்சி பெற்றுச் சுகம் பெற்றாராம். இந்த நிலை வேற்றுமைக் காட்சியில் விளையாடும் விஞ்ஞானத்துக்குக் கிடைப்பதில்லை. வேற்றுமை - பலவாகக் காணும் காட்சி — இன்றேல் விஞ்ஞானமும் இல்லை. வேற்றுமை ஒழிந்தால் விஞ்ஞானம் ஒழிந்ததே. அந்தோ! அவ் வொற்றுமைக் காட்சியை அறிவது யார்? ஆண்டு அறிவு இன்றே? அறிவினால் அறிய முடியாததை ஒத்துக் கொள்வதுதான் எவ்வாறு? தர்க்கத்துக்குப் பொருந்தியதாய் இல்லை! ஆம்! தர்க்கம் விஞ்ஞானத்தின் கைப்பொம்மை தானே! விஞ்ஞானத்துக்கே இடம் இல்லை எனில் தர்க்கத்துக்கு அங் கென்ன வேலை? மூளை குழம்புகிறது. மனம் சுழல்கிறது. ஓ மனமே! ஓடாதே. ஓடினால் சுழன்று தான் விழுவாய். சிறிது நேரம் அமைதியாக இரு.

ஓடும் மனத்தோர்க்குக்—கிளியே
உபதேசம் ஏதுக்கடி ? —கிளிப்பாடல்.

ஆராய்ச்சியும் - விஞ்ஞானத்தின் ஆராய்ச்சியும் - ஒரு ஓட்டமே. ஓட்டம் இங்குச் செல்லாது. ஓட்டம் இல்லாத - அமைந்த - பேரமைதியான - ஏன் பிணம் போன்று அமைதியான - நாட்டமே வேண்டும். இஃது அலௌகிகக் காட்சி (mystic experience).

திருநாவுக்கரசரைக் குற்றம் சாட்டிப் பல்லவ அரசன் நீற்றறையில் இட்டனன். மூன்று நாள் கழித்துப் பார்த்தனர். அவர் வெந்து சாம்ப லாக வில்லை. அவர், "நான் வெப்பமான நீற்றறையில் இல்லை. சிவ பெருமான் திருவடி நீழலில் இருந்தேன். அது வீணை நாதமும், முழு மதியும், தென்றலும், இளவேனிலும், தாமரைப் பொய்கையும் போன்று தண்ணென்றிருந்தது" என்றார்.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

இஃது ஒரு அலௌகிக அனுபவம். உலகத் துன்பங்கள் யாதும் தாக்காத நிலை ஒன்று உண்டு என்று அறிய முடிகிறது.

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.

மனக்கவலை மாற்றும் இந்தத் தனக்குவமை இல்லாதான் யார்? உலகத்துக்கு வேறா? உயிர்களுக்கு வேறா? ஆம் எனில் வந்தது மோசம். இப்படிக் கடவுளை ஒப்புக்கொண்டால் அக் கடவுள் மனிதருள் பெரியமனிதன் போன்றவன். மனிதர்க் குள்ள குறைபாடுகள் அனைத்தும் அவனுக்கு முண்டு. உலகத்துக்கும் உயிர்களுக்கும் வேறானவன் ஆதலின் நிறைந்தோன் அல்லன். கண்டப் பொருள் அழியும். அகண்டமாயின் உலகையும் உயிரையும்

உட்கொண்டு அவற்றைக் கடந்து நிற்க வேண்டும். அப்படி ஒரு பொருள் உண்டா? அதன் அனுபவம் ஏற்பட வில்லையே! பிருகு தந்தையை அடைந்தார். தந்தை முன்போல் "தவஞ் செய்" என்றார்.

"இவை யெல்லாம் எதிலிருந்து தோன்றினவோ, எதில் நிலை பெற்றுள்ளனவோ, எதில் ஒடுங்குமோ அது பிரம்மம்." இவை யெல்லாம் ஒடுங்கியபோது அந் நிலை எப்படி யிருக்கும்? இவை எல்லாம் ஒடுங்கிய நிலை நம் அநுபவத்தில் உண்டோ? சுழுத்தி; நல்ல உறக்கம். சுழுத்தியில் இவை யெல்லாம் இல்லை. இவை எல்லாம் இல்லையா? தூங்குகிறவன் இவற்றை அறிய வில்லையா?

சுழுத்தியில் உலகம் ஒடுங்குகிறது. நனவில் உலகம் தோன்றுகிறது. உலகம் எப்படித் தோன்றுகிறது என்பதைத் தாயு மானவர் விளக்குகின்றார். ஒன்று மறியாமல் உறங்குபவன் கண் விழிக்கு முன்னரே "நான் இருக்கிறேன்" என்று உணர்கின்றான். இது தான் அகங்காரம் என்று அறிவு நூல்களில் பேசப் படுகிறது. "நான்" என்று உணரும் அக் கணத்தில் அவன் உலகை உணர்வ தில்லை. ஒரு கணம் கழித்துத் தன் கை கால் களையும் பிறகு தான் எங்கே படுத்திருக்கிறான் என் பதையும் உணர்கின்றான். அப்போதுதான் உலகம் பிறக் கிறது. கை கால்கள் (உடல்) தனக்கு வேறன்றோ? கண் விழித்த பிறகு பலவாகக் காட்சி தரும் உலகையே பார்த்து விடுகிறான். தாயுமானவர் இதனை,

நானென்னும் ஓரகந்தை எவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானா வாகித்
தான்வந்து தொடரு மித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமையெவர் சாற்ற வல்லார்
ஊனென்றும் உடலென்றும் கரண மென்றும்
உள்ளென்றும் புறமென்றும் ஒழியா நின்ற
வானென்றும் காலென்றும் தீநீ ரென்றும்
மண்ணென்றும் மலையென்றும் வனம தென்றும்.

மலைமலையாங் காட்சிகண்கா ணுமை யாதி
மறப்பென்றும் நினைப்பென்றும் மாயா வாரி
அலையலையாய் அடிக்குமின்ப துன்ப மென்றும்
அதைவிளைக்கும் வினைகளென்றும் அதனைத் தீர்க்கத்
தலைபலவாம் சமயமென்றும் தெய்வ மென்றும்
சாதகரென் றும்அதற்குச் சாட்சி யாகக்
கலைபலவாம் நெறியென்றும் தர்க்க மென்றும்
கடலுறுநுண் மணலெண்ணிக் காணும் போதும்.
காணரிய அல்லலெலாம் தானே கட்டுக்
கட்டாக விளையும்........

என்று விளக்குகிறார்.

விஷ்ணு உலகை உண்டு அறிதுயில் கொள்கின்றார் என்னும் புராண கதையும் இத் தத்துவார்த்தத்தையே விளக்குகிறது என்பதை, அறிஞர் ல. நாராயண தேசிகர்,

விண்டுவுறை ஆலயத்திற் புகுந்தடியேன்
என்றாங்கு வீற்றி ருந்தே
அண்டமுண்ட திருவாயான் அமர்பள்ளி
எங்கென்றான் அதோகா ணென்றார்
கண்டதின்றோ நீர்துயிலுங் காலத்தில்
அண்டமுண்ட கதைநீர் என்றான்
நன்றலநீர் சொல்வதென்றார் ஆய்ந்தோய்ந்தால்
தெரியுமென்று நகைத்திட் டானே.

—அநுபவானந்த தீபிகை.

என்று பாடித் தெரிவிக்கின்றார். இதன் கருத்து "ஒரு அறிஞர் விஷ்ணு கோயிலுக்குச் சென்றார். அண்டமுண்ட வாயான் பள்ளிகொண்ட இடம் எங்கே? என்று வினவினார். அங்கிருந்தோர், 'அதோ பாரும்' என்றனர். அறிஞர், துயிலும் திருமாலைக் கண்டார். தாம் துயிலும் போதும் உலகம் தம்முள் ஒடுங்குகிறது என்பது அவர்க்கு ஞாபகம் வந்தது. தமக்குத் திருமால் உருவம் காட்டினவர்களைப் பார்த்து, 'நீர் துயிலும் காலத்தில் நீரும் அண்டமுண்டு உறங்குகின்றீர். இது தெரியாதா?' என்றார்.

அவர்கள், நீர் இப்படி (ஜீவனையும் ஈசனையும் ஒன்றாக்கிப்) பேசுவது நன்றன்று என்றனர். அறிஞர், 'அமைதியாக ஆராய்ந்து பார்த்தால் நான் கூறிய உண்மை விளங்கும்' என்று கூறினார்'' என்பது.

அந்த ஆராய்ச்சி கிடக்கட்டும். ஒன்று உண்மை. சுழுத்தியில் எவனும் ஆநந்தமே அனுபவிக்கிறான். நனவு கனவுகளில் துவைதம் உண்டு. ஆதலின் துன்பம் உண்டு. சுழுத்தியில் துவைதம் - பலவற்றைக் காணும் காட்சி - இல்லாமையின் துன்பம் இல்லை. இன்பம் உண்டு. பிருகு ஆராய்ந்தார். விஞ்ஞானம் கடந்த நிலை ஆநந்த நிலை. "ஆநந்தம் பிரம்மம். ஆநந்தத்திலிருந்தே இவை உண்டாகின்றன; ஆநந்தத்தில் இவை நிலைபெறுகின்றன; ஆநந்தத்தில் ஒடுங்குகின்றன." (தைத்ரீயம்: பிருகுவல்லி—6.) என்று அவர் அறிந்தார்.

"எவன் இவ்வாறு அறிகிறானோ அவன் பிரம்மத்தில் நிலைக்கின்றான் (பிரம்ம மாகவே ஆகிறான்)'' (தைத்ரீயம்: பிருகுவல்லி—6.) என்று தைத்திரீ யோப நிஷத் பஞ்ச கோச விவேகத்தின் பயன் கூறி முடிக்கின்றது.

பிருகு சுழுப்தி ஆநந்தத்தையே - ஆனந்த மய கோசத்தையே - பிரம்மமாக அறிந்தாரோ எனின், அற்றன்று. அங்ஙனம் கொண்டால், பிருகு "சுழுப்தி ஆனந்தம் பிரம்மம் என்று தீர்மானித்தார்'' என்று கொள்ள வேண்டி வரும். உபநிஷத்தோ, "ஆநந்தம் பிரம்மம் என அறிந்தார்'' என்று கூறுகிறது. உபநிஷத்து, "பிருகு தவம் செய்து அறிந்தார்'' என்று கூறுகிறது. தவம் என்பது பஞ்சேந்திரியங்களையும் மனத்தையும் அடக்கி ஒரு பொருளைச் சிந்தித்தல் என்று முன்னரே கூறினோம். இதனைத் தியானம் என்றும் கூறலாம். தியானம் இரு வகைப்படும். ஒரு பொருளை இடைவிடாது நினைப்பது ஒருவகை. அது "சிவாயநம'' என்று தியானிப்பது போன்றது. ஒரு பொருளை ஆராய்ச்சியோடு நினைப்பது இரண்டாவது வகை. இதுவே சம்யமம் என்று யோக நூல்களில்

கூறப்படும். முதல் வகைத் தியானம் செய்வதற்கு ஒருவன் மன மடங்கியவனாய் இருந்தால் போதும். இரண்டாவது வகைத் தியானம் செய்வதற்கு ஒருவன் மனம் அடங்கியவனாகவும் கூரிய புத்தி யுடையவனாயும் இருத்தல் வேண்டும். இவ் விரண்டாவது வகைத் தியானத்தையே பிருகு செய்தார் என்று கொள்ள வேண்டும். முதல் வகைத் தியானம் அறிவதற்குச் சாதன மாகாது. பிருகு அறிந்தார் என்று உபநிஷத் கூறுவதால் அவர் இந்த இரண்டாவது வகைத் தியானத்தையே செய்தார் என்று கொள்ள வேண்டும். உபநிஷத்மீதா சுருக்கமாகக் கூறுகிறது. மேலும் ஆராய்ச்சி வடிவ தியானத்தில் ஒருவனுக்கு என்னென்ன தோன்றும் என்று யாரும் அறிய முடியாது. ஒருவருடைய ஆராய்ச்சி போல் இன்னொருவருடைய ஆராய்ச்சி இராது. ஆயினும் முடிவு ஒன்றாகவே இருக்கும்.

பிருகு ஆத்ம சொரூபத்துக்கு வேறாகாத பிரம்மத்தைத் தியானித்தார். அன்றெனில் பஞ்ச கோச விவேகத்தால் பிரம்மம் அறியப்பட்டது என்று கூறுதல் முடியாது. பஞ்ச கோசங்கள் நான் நான் என்று ஒவ்வொருவருக்கும் ஒரு வகையில் அபரோக்ஷமாக விளங்கும் ஆத்மாவை மறைத்துக்கொண் டிருக்கின்றன. யாவருக்கும் பரோக்ஷமாக (அறியப்படாததாக) விளங்கும் பிரம்மத்தை மறைக்க வில்லை. ஆத்மாவை மறைத்துக்கொண் டிருக்கும் பஞ்ச கோசங்களை நீக்கினால் ஆத்மா தெரியும். அவ்வாத்மா பிரம்ம வடிவமே. ஆதலின் ஆத்மா அறியப்பட்டதென்னும்போது பிரம்மம் அறியப்பட்ட தாகின்றது. பிரம்மம் சத் (இருப்பது), சித் (அறிவது), ஆனந்த (சுகமாயிருப்பது) சொரூபம். ஆத்மாவும் சத் சித் ஆனந்த சொரூபம். நான் இருக்கிறேன் என்று ஒவ்வொருவரும் அறிகின்ற படியால் ஆத்மா சத் (இருப்பது). நான் அறிகிறேன் என்று ஒவ்வொருவரும் பேசுகிறபடியால் ஆத்மா சித் (அறிவது). இது வரை எல்லோரும் அறியலாம். ஒருவரும் இதற்கு எதிராக அறியவாவது பேசவாவது முடியாது. ஆனால், ஆத்மா ஆநந்தம் (சுக சொரூபம்) என்று

அறிவதற்குத்தான் முயற்சி வேண்டும். அம் முயற்சிதான் பஞ்ச கோச விவேகம். "உடல் நான் அன்று" என்று சிறிது நினைத்துப் பாருங்கள். உடலுக்கு எல்லா விதத் துன்பமும் உண்டு; நோய் உண்டு; மற்றவரால் துன்பம் உண்டு; இடி பூகம்பம் முதலியவற்றாலும் துன்பம் உண்டு. உடலுக்கு வேறானது ஆத்மாவாயின் அதனை எந்தத் துன்பம் அணுகும்! ஆத்ம ஞானம் பயில்வோர் இவ்வாறு தியானிக்கின்றனர்: "உடல் நான் அன்று; என்னால் அறியப்படுதலின். நான் அறிபவன். பிராணன் நான் அன்று; என்னால் அறியப்படுதலின். மனம் நானன்று; என்னால் அறியப்படுதலின். அதனை ஒன்றை நினைப்பதை விட்டு இன்னொன்றை நினைக்குமாறு நான் நியமிக்கவும் கூடும். மனத்தை அறிபவனும் நியமிப்பவனும் நான். அங்ஙனமே விஞ்ஞானமும் நான் அன்று. ஆனந்தமும் நான் அன்று. ஆநந்தம் நான் அன்றா ? ஆம். என்னால் அறியப்படும் சுழுப்தி ஆநந்தம் நான் அன்று. அதனையும் அறிபவன் நான். எதிரிட்டு அறியப்படும் ஆநந்தம் நான் அன்று. எனினும் நான் ஆநந்த வடிவினன். பஞ்ச கோசங்களுக்கும் வேறாய் இருப்பவன் நான். நனவு, கனவு, சுழுத்தி என்னும் மூன்று நிலைகளையும் அறிபவன் நான். சத் சித் ஆனந்த வடிவினன் நான். சத் சித் ஆநந்த பிரம்மம் நான். நான் பிரம்மம். அகம் பிரம்மாஸ்மி." ஆத்ம ஞானப் பயிற்சி இங்குச் சுருக்கமாகவே எழுதப்பட்டது. அஃது பன்மடங்கு விரிவானது என்பதைப் பல அறிவு நூல்களாலும் ஆசாரியன்மாராலும் அறிக.

இப் பயிற்சியின் முடிவில் ஆத்மாவைத் தியானித்துக்கொண்டிருந்த மனம் ஆத்மாவாக ஆய்விடுகிறது. அங்கு உலகம் தோன்றுவதில்லை. உடல் தோன்றுவதில்லை. பஞ்ச கோசங்கட்கு வேறாகிய ஆத்மாவே விளங்குகிறது.

ஐந்து கோசங்களாம் சட்டைகள் அணிந்து கம்பீரமாய் வெளியில் நிற்கும் அகங்காரி புருஷனுக்குப் பிரகிருதி தன் இரகசியத்தைக் காட்ட மறுக்கின்றாள்.

அவன் வருந்தி முயன்றும் பிரகிருதி இரகசியத்தைக் காண முடியவில்லை. "அநித்தியப் பூதத் தேகம் நான் அன்று; இந்தியத் தரங்கம் நான் அன்று; நனித்த ஆங்காரப் பிராண வர்க்கங்கள் அன்று; நற் புந்தியும் அன்று" என்று அவைகளைக் கழற்றி எறிந்து, தான் மாத்திரமாய், நிர்வாணமாய் உள்ளே நிற்கும் ஆநந்த ரூபியாகிய ஆத்மாவின் எதிரே, அப் பிரகிருதி வெட்கித் தனித்து நிற்க ஆற்றுதவளாய், வேற்றுமைத் தோற்றமாம் கலையவிழ்ந்து, "நீயே நான்; உன்னையன்றி எனக் கிருப்புண்டோ? நாம் இணைந்த நிலை இன்பம்; பிரிந்த நிலை துன்பம்" என்று கூறி, உருகி ஒன்றுகிவிடுகின்றுள்.

இரண்டு - பல - ஆக இருப்பது தான் உண்மை என்று கொண்டாலும் ஒன்றுவதில் தான் இன்பம் தோன்றுகிறது. அதுவும் தன்னை மறந்து ஒன்றுக வேண்டும். இசையரங்கு நடக்கிறது. முதலில் தாளம் போட்டுத் தலையாட்டி அனுபவித்தவர், இசை மெலிந்து இழைந்து செல்லச் செல்ல அதில் இலயித்துத் தம்மை மறந்து இன்புறுகின்றனர். இலயத்தில் இன்பம் உண்டாகின்றது. பாடகன் பாட்டுந் தானும் ஒன்றுகின்றுன். கேட்போன், கண்மூடித், தன்னை மறந்து இசையும் தானும் ஒன்றுகின்றுன். அங்கே! இன்பம் இலயம்! இலயம் அழிவு. பாடகன் அழிந்தானு? பாட்டு அழிந்ததா? இரசிகன் அழிந்தானு? இசையழிந்ததா? இல்லை. பாடகன் பாட்டு என்ற வேற்றுமை அழிந்தது. இரசிகன் இசை என்ற வேற்றுமை அழிந்தது. வேற்றுமை உண்மையாயின் அழியாது என்று புத்தி தர்க்கம் செய்து துன்புறட்டும். மனம் ஒற்றுமை உணர்ந்து தன்னையும் மறந்து இன்பம் அனுபவித்துவிட்டது!

காதலன் காதலி வேறுவேறுதான். இடத்தால் வேறுபட்டு நிற்பதை, ஒரு காலத்தில் ஓரிடத்தில் சந்திப்பது மூலமாக வென்றுவிட்டார்கள். பொருள் தன்மையால் வேருகவே இருப்பினும் ஒன்றுகவே விரும்புகிறுர்கள். கட்டித் தழுவி ஒன்றுகிறுர்கள். உடல் பிரிகின்றன.

"இம்மைப் பிரியலம்" என்றான். "அம்மைப் பிரிவீர் போலும்" என்று கண்ணிறை நீர் மல்கினாள். அந்தோ வேற்றுமை!

சிலந்தி இன்பானுபவத்தில் பெண் ஆணை விழுங்கி விடுகிறது. ஆண் ஒன்றாக - விழுங்கப்பட்டு ஒன்றாக - இசைகின்றது. விழுங்கப்பட்டுக்கொண்டே இருக்கும் போதும் இன்பம் உண்டாகுமோ? யார் அறிவார்?

காதல், கடவுளிடம் செல்லும்போது பக்தி எனப் படுகிறது. "தான் வேறு கடவுள் வேறு என்று உபாசிப்பவன் மூடன்; அவன் பசுவுக்கு (மிருகத்துக்குச்) சமம்" (ப்ருகதாராண்யகம்: அத்யாயம். I, பிராம்மணம் 4, வா. 10.) என்பது உபநிஷத். தானே அவனாகப் பாவித்து அல்லது அறிந்து பக்தி செய்வது அனன்ய பக்தி. சிவன் சீவனை விழுங்கி விடுகின்றான். சீவன் அவ்வாறு பாவிப்பது அவன் இசைவைத் தெரிவிக்கிறது.

சிந்தை பிறந்ததும் ஆங்கே - அந்தச்
சிந்தை யிறந்து தெளிந்ததும் ஆங்கே
எந்த நிலைகளும் ஆங்கே - கண்ட
யான்றான் இரண்டற் றிருந்ததும் ஆங்கே

—தாயுமானார்.

ஒற்றுமைக் காட்சி இன்பம். வேற்றுமைக் காட்சி துன்பம். மனிதன் இன்பம் நாடியே தொழில் புரிகின்றான். அவ் வின்பம் ஒற்றுமையில் இருக்கிறது. மனிதன் அன்பு - விருப்பம் - இன்பத்தை நோக்குகிறது. அவ் வின்பம் ஒற்றுமையில் இருக்கிறது. கலைகளெல்லாம் இன்பத்தை நோக்கமாகக் கொண்டன. இன்பம் ஒற்றுமையில் இருக்கிறது. உலகம் வேற்றுமை உடையதாய் - நாம ரூபங்களால் வேறுபட்டு - நிற்கிறது. விஞ்ஞானம் தான் உயர்ந்தது எனின், உலகக் காட்சிக்கு மேற்பட்ட நிலை இல்லை. மனிதன் முயற்சிக் கெல்லாம் பலன் துன்பமே. ஆனால் கிருஸ்து, மகம்மது, தாயுமானார், மாணிக்கவாசகர், அப்பர், சங்கரர், இராமகிருஷ்ண பரமஹம்சர் முதலானவர்களை

நாம் நம்ப முடியாதா? இவர்களை நம்ப முடியா தெனின் எந்தச் சமயமும் நில்லாது. சமயங்கள் சமயாசாரியர்களின் அலௌகிகக் காட்சியை (mystic experience) ஆதார மாகக் கொண்டே நிலைபெறுகின்றன. அலௌகிகக் காட்சியை ஒப்புக்கொள்ளாதவன் எல்லா மதங்களையும் மறுக்கவேண்டும். அதனால் அறிவுக்கு ஒவ்வாததாக— மூடத்தனமாக - அலௌகிகக் காட்சி ஒன்று உண்டு என்று ஒப்புக்கொள்ள வேண்டுமா? அலௌகிகக் காட்சி அறிவுக்கு எட்டாதது என்பது வரை சரி; அறிவுக்கு ஒவ்வாதது என்ப தில்லை. யாரும் தன் அறிவுக்கு எட்டாத தனால் ஒன்றை இல்லை என்று சொல்லக்கூடாது. பேரறிஞர்கள் இந்த அலௌகிகக் காட்சி யுடையவர்க ளாகின்றார்கள். விஞ்ஞானம் தன் பருமையை விட்டு நுணுகியதாக ஆகும்போது - பேரமைதி நிலையில் - இந்த அலௌகிகக் காட்சியைக் காண்கிறது. "இது சூட்சும தரிசிகளால் சிறந்த நுட்பமான புத்தியால் அறியப்படு கிறது." (கடோப நிஷத் : அத். 1, மூன்றும் வல்லி - 12.) உலகை உணரும்போது பிரத்தியட்சம், அநுமானம் முதலிய பிரமாணங்களுக்கு ஆதாரமாக விளங்கும் ஸ்தூல புத்தியே சூட்சுமத் தன்மை யடைந்து ஆத்மா வைக் காணும்போது புத்தி யென்னும் பெயரை இழந்து விடுகிறது. எனவே ஆத்ம தரிசனம் பிரமாணங்களால் உண்டாகாமையால் பிரமாண்ய மன்று. பிரமாண்ய மன்று என்பதால் அது பொய் அறி வன்று. அது மெய் அறிவுக்கு எல்லாம் மேலாகிய மெய் யறிவாம். மற்ற மெய்யறி வெல்லாம் பொய்யாய்ப் போகத் தான் மெய்யாக விளங்கும் மெய் யறிவாம்.

மையாடு கண்ணியும் மைந்தரும் வாழ்வும் மனையுஞ் செந்தீ
ஐயாநின் மாயை உருவெளித் தோற்றம் அகிலத் துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்ட வெறும்
பொய்யாய்ப் பழங்கதையாய்க்கன வாய்மெல்லப் போயி
[னவே
—பட்டினத்தார்.

த்வைதக் காட்சியில் மகிழ்பவர்க்கு துவைதம் பொய் என்பதைக் கேட்கப் பயமாய் இருக்கிறது. இந்தப் பயம் அவர்கள் அறிவு எவ் வளவுக் கெவ்வளவு புலன்களில் ஆழ்கின்றதோ அவ்வளவுக் கவ்வளவு அதிகமாம். அழகிய மனைவியும் அருமை மகனும் பொய்யா? ஆ!

"ஏகாந்தம் - தனிமை - இனிது" என்னும் உண்மை ஒளவைக்கும், சங்கரர்க்கும், தாயுமானூர்க்கும் அனுபவ மாகலாம். புலன்களை வெல்லாதவர்கள் தனியே இருக்கவும் அஞ்சுவர். தனிமையை அவர்கள் சகிக்க முடியாது. இவ்வாறு உயர்ந்தோரால் கொள்ளப்படும் உண்மைகள் தாழ்ந்தோரால் தள்ளப்படுவன பல உள. உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்று யாரை யார் மதிப்பிடுவது? "சுயநலங் கருதுபவன் தாழ்ந்தவன்; பிறர் நலம் கருதுபவன் உயர்ந் தவன். ஆசை யுடையவன் தாழ்ந்தவன்; ஆசை வென்ற வன் உயர்ந்தவன். புலன்கள் வசப்பட்டவன் தாழ்ந்தவன்; புலன்களை வென்றவன் உயர்ந்தவன்" என்னும் உண்மை கள் யாரால் மறுக்கப்படும்? பிறர் நலம் கருதுபவன் மகிழ்ச்சியைச் சுயநலம் கருதுபவன் அறியான். ஆசை வென்றவன் மகிழ்ச்சியை ஆசை யுடையவன் அறியான். புலன்கள் வென்றவன் மகிழ்ச்சியை புலன்களால் மகிழ் பவன் அறியான்.

வென்றுளே புலன்களைந்தார் மெய்யுணர்
உள்ளந்தோறும்
சென்றுசென் றமுதம் ஊற்றும் திருவருள்
போற்றி......
—திருவிளையாடற் புராணம்.

அங்ஙனமே மனத்தைக் கடந்தவன் மகிழ்ச்சியை மனம் உடையவன் அறியான். மன மற்ற நிலையிலேயே ஆநந்தம் விளங்குகிறது. உலகை மறந்த நிலை அது.

உடல் நான் என்றும் உலகம் இது என்றும் கண்டு கொண் டிருக்கும் வரை உண்டுடுத்து இனம் பெருக்கித் திரிந்துகொண் டிருக்கலாம். உண்மை யுணரும் வேட்கை யுடையவனுக்கு ஐயம் நீங்குவது இந் நிலையில் இல்லை.

கண் மூடி, மௌனி யாகி, (மனமும் அற்றுத்) தனியே இருக்க எண்ணுவது ஐயமற உண்மை யுணர்ந்து ஆநந்தமாக நிலை பெறுதற்கே. நான் மறை ஆறங்கம் முதலியன கற்றுக் கேள்வி ஞானத்திலும் மிகுந்த சனகாதி நால்வருக்கும் கண் விழித்து உலகைப் பார்த்துக்கொண் டிருக்கும் வரை தட்சிணாமூர்த்தியே உபதேசித்தும், ஐயம் அகலவில்லை. துவைதத் தோற்றத்தில் இருந்துகொண்டு அத்வைதத்தைப் பேசினால் ஐயம் அகலுமா? மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாததை உபதேசத்தால் சொல்லிவிடுதல் எவ்வாறு? சிவபெருமான் உண்மை யுணரும் நிலையில்-மனமற்ற நிலையில் — சமாதி நிலையில் - துரிய நிலையில் - தா மிருந்து, அவர்களையும் இருத்திக் காட்ட விரும்பி, சின்முத்திரை காட்டிக் கண் மூடினார்; மனத்தையும் மூடினார். மனம் மனத்தை ஈர்க்கும். வள்ளற்பிரானது ஆநந்த அமுத மயமான அமைதி எழிற் காட்சியில் ஈடுபட்ட சனகாதியரும் கண் மூடினர். மனமும் மூடினர். மெய் யுணர்ந்தார் ஆயினர்.

அருமையிலும் அருமையாகத் தோன்றினாலும் ஒவ்வொருவரும் அடைதற் குரிய நிலை இது. மனித லட்சியம் இது. உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம் உடம்பினுள் உத்தமனைக் காண்பது. உடம்பினுள் உத்தமன் கோயில் கொண்டான் என்று, அவனைக் காணும் பொருட்டே, உத்தமர், உடம்பை வளர்க்கின்றனர். இன்றேல் என்றாவது மண்ணோடு மண்ணாகும் இந்த உடலால் தான் என்ன பயன்?

எங்கும் நிறைந்த பொருளாகத் தன்னைக் காணவிடில் இன்ப நிலை பெறுதல் இல்லை.

என்னைத் தவிர இங் கேதுமில்லை என்றனை
பொன்னைத் தவிர இலாப் பூடணம்போல்.
அறிவொன்றே கெட்டி; அயலனைத்தும் போலே.
—சச்சிதானந்த சுவாமிகள்.

காண்பதற்கும், கேட்பதற்கும், அறிவதற்கும் அயலாம் பொருள் ஒன்றும் இல்லாத நிலை வியாபக நிலை. அந்த

ஆனந்த நிலை. நிறைந்தது ஆனந்தம். குறைந்ததற் காகந்தான் குவலயந் தன்னில் இல்லை. நிறைந்ததே இந்த ஆன்மா. பார்ப்பதற்கும் கேட்பதற்கும் அறிவதற் கும் தனக்கு வேறும் பொருள் ஒன் றுளதாயின் அஃது அகண்ட நிலை யன்று; கண்ட நிலை. அங்கு ஆநந்த மில்லை; அல்லலே உண்டு. காண்பானும் காணப்படும் பொருளும் வேற்றுமை நீங்கி ஒன்ருக விளங்குவது வெறும் பேச் சன்று. அனுபவ நிலை. அங்கு ஆநந்தம்; ஆநந்த சமுத் திரம். அந்த நிலையைப் பிருகு அடைந்து திருப்தி அடைந் தார். அறிஞர் ஆராய்ச்சி இங்கு முடிகின்றது. இதற்கு மேல் அறிய வேண்டுவது இல்லை; அடைய வேண்டுவ தில்லை. "எதனை அறிந்தால் அறியப்படாதது (எல்லாம்) அறிந்ததாமோ" (சாந்தோக்ய உபநிஷத்: 6ஆம் பிரபா டகம், கண்டம் 1-3.) அத்தகைய பரம்பொருளைப் பிருகு அறிந்தார்.

முகத்துக் கண்கொண்டு உலகைக் காணலாம். அகத் துக் கண்கொண்டு ஆத்மாவைக் காண வேண்டும். இந்த அகத்துக் கண் மனம் அன்று. மனம் சூட்சுமத்திலும் சூட்சுமமாக, சத்துவத்திற் சத்துவமாக, மிஞ்சிய நிலை. எதிரிட்டுக் காணக்கூடிய தொன்றும் ஆண் டில்லாமை யால், அதனை மனத்தால் அறிவது என்று கூருமல், மன மிறந்த நிலையில் அறிவினுல் அறிவது என்று கூறுவர் அறிஞர். இந்த அறிவு உலகை உணரும் புத்தி அன்று. ஆத்மாவே அறிவு. எனவே ஆத்மா தன்னைத் தன்னுல் அறிகிறது. புத்தியினுல் அறியப்படாமையின் ஆண்டு அறிவதே இல்லை என்று கூறவேண்டா. உலகத்துப் பொருள்களை அறிவதுபோல் ஆத்மாவை அறிய முடியாது; ஆத்மா புலன்களால் அறியப்படும் உலகப் பொருள்களில் ஒன் றல்ல வாதலின். மாம்பழத்தைச் சுவைக்கும் ஒருவன் அதனை நன்கு சுவைக்கும்போது கண்ணை மூடிக்கொள்ளு கிருன். வேறு இந்திரியங்கள் வேலை செய்வது நாக்கு உருசி அறிவதற்குத் தடையாய் இருக்கிறது. அங்ஙனமே மனம் உலகப் பொருள்களில் எதையாவது அறிவது ஆத்மா

ஆத்மாவை ஆத்மாவால் அறிவதற்குத் தடையாகின்றது. பொறிகளாலும் மனத்தாலும் அறிவது சாதாரண அறிவு. இவ் வறிவு நம் எல்லோருக்கும் தெரியும். பொறிகள் மனம் இவற்றின் உதவி யின்றி அறிவது அலௌகிகக் காட்சி (Mystic experience – Intuitional experience) எனப்படும்.

இவ்வாறு உலகத்தை உணராது ஆத்மாவை உணரும் முயற்சியில் இருக்கும் நிலைக்குச் சமாதி நிலை என்று பெயர். விழிப்பு நிலை, கனு நிலை, சுழுத்தி நிலை ஆகிய மூன்றுக்கும் வேருனதாகலின் இது துரியம் (நான்காவது நிலை) எனப்படும். சுழுத்தியில் உலகை உணராமைபோல தூங்கிவிடாமல் விழித்திருக்கும்போதே உலகை உணரா திருத்தலின் இது நனவிற் சுழுத்தி எனவும் பெயர் பெறும்.

நனவிற் சுழுத்திநிலை வரின்அப் பொருள் திகழும்
நலமாகவே. —சிவஞான போதம்.

ஒரு பொருளும் தோன்ருத நிலை சுழுத்தியாதலின் அதனை இரா வென்றும், எல்லாப் பொருளும் விளங்கும் நிலை நனவாகலின் அதனைப் பக லென்றும் கொண்டு, அவ் விரண்டு நிலைகளுக்கும் வேறுபட்ட இதனை, "இராப் பக லற்ற விடம்" என்றும் கூறுப.

சமாதி, துரியம், நனவிற் சுழுத்தி, இராப் பகலற்ற விடம் என்னும் பெயர்களை யுடைய இந் நிலையில் இருந்து தான் ஆத்மாவை அறிய வேண்டும். இந் நிலை அடையாதார், நூல்களின் மூலமாகவும் சத்குருவின் உபதேசத்தாலும் ஆத்மாவை அறிந்தா ராயினும், அவர் ஆத்மாவை நேரே அறிந்தவ ரல்லர். ஆத்மாவைப் படித்தும் கேட்டும் அறிவது பரோட்ச ஞானம் (காணுத ஞானம்) எனப்படும். சமாதியில் இருந்து ஆத்மாவை நேரே அறிவது அபரோட்ச ஞானம் (கண்ட ஞானம்) எனப்படும். இதுவே ஆத்ம ஞானம். பிரம்ம ஞானமும் இதுவே. பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமே ஆகிருன். "பிரம்மவித் பிரம்மைவ பவதி."

# பயிற்சி

பல வருஷங்கள் (10 அல்லது 20 வருஷம்) வேதாந்தம் பயின்றவர்க்கே ஏதாவது உயர்ந்த வேதாந்தப் பயிற்சி செய்யும் தகுதி உண்டு. மற்றவர் சைவராயின் பஞ்சாட்சரத் தியானமும், வைணவராயின் அஷ்டாட்சர, துவாதசாட்சரத் தியானமும் செய்து அமைக. இவற்றைக் குறைவாக எண்ண வேண்டா. வேதாந்தம் பயிலுபவருக்குக் கூட இம் மந்திரங்களில் ஒன்றை நெடுநாள் பயில்வது பெரு நன்மை தரும். இதனால் கடவுள் அருள் பெற்றவர்க்கு அடுத்த பிறவியிலாவது வேதாந்தம் (அத்வைத நூல்களைப்) பயிலும் வாய்ப்பு உண்டாகும்.

1. அநந்தவித சன்மத்தில் அனுட்டிப் புற்ற
   அறங்களெலாம் பரிபாக மான வர்க்கே
   கனந்தருமிப் பரப்பிரம்ம ஞானம் சற்றும்
   கலங்காத மனதினிடை எளிதாய்த் தோன்றும்.

2. பரமான அன்புடனே பரசி வத்தைப்
   பாங்காக ஆராதித் தருள்பெற் றோர்க்கே
   உரமான அகம்பிரம்ம நிச்ச யந்தான்
   ஊனமற உள்ளத்தில் உதியா நிற்கும்.

என்னும் ரிபுகீதை வரிகள் அறப் பரிபாகமும் ஈச னருளும் பெற்றவரே ஆத்ம ஞானம் பெறுவர் என்று கூறுவ தறிக.

யோகிகளும், பக்தர்களும், வேதாந்தப் பயிற்சி செய்வோரும் சமாதி நிலை அடைய முடியும். ஆனால் வேதாந்தப் பயிற்சியின் மூலம் சமாதி நிலை அடைபவர்தான் ஆத்ம ஞானம் பெற்று ஆநந்த மய மாவர். மற்றவர் சமாதி நிலை பெற்றாலும் ஆத்ம ஞானம் அடைவ தில்லை. அதற்குக் காரணங்களை விளக்க ஈண்டு இட மில்லை.

மகா வாக்ய விசாரம் செய்து, பிறகு மகா வாக்யத் தியானம் செய்வது அகண்டாகாரத் தியான மெனப்படும்.

"தேகமே நான்" என்று கண்டமாகத் தன்னை அறிந்து கொண்டிருந்தவன், தேகம் முதலிய பஞ்ச கோசங்கட்கும் வேருய், தேகம் முதலிய எல்லாவற்றையும் அறியும் அறிவாய் நான் இருக்கிறேன். "இந்த நான் பிரம்மமே - அயமாத்மா பிரம்மம்." "நான் பிரம்மமே - அகம் பிரம்மாஸ்மி" என்று தியானிக்கும்போது அந்தத் தேகத்துக்கு வேருய ஆத்மாவுக்குக் கண்டநிலை - துண்டுபட்டு நிற்கும் நிலை - இல்லை. அகண்ட நிலை தான் உண்டு. தன்னை அகண்டமாய்த் தியானித்தலின் இஃது அகண்டாகாரத் தியானம் எனப்படும். இந்தத் தியானம் நெடுநாட் பழக்கத்தால் திரிபுடி யற்ற தாகும்போது அகண்டாகார விருத்தி உதய மாகிறது. இதுதான் ஞானம் எனப்படும். காண்பான், காட்சி, காணப்படும் பொருள் மூன்றும் திரிபுடி எனப்படும். தியானிக்கிறவன் தன்னையும், தான் தியானிக்கிருன் என்பதையும், எதைத் தியானிக்கிருன் என்பதையும் அறிகிருன். இது திரிபுடி சகித நிலை. தியானத்தின் நெடு நாட் பழகத்தால் தியானிப்பவன் தன்னையும் மறந்து, தான் தியானிக்கிருன் என்பதையும் மறந்து, தியானிக்கும் பொருளாகவே ஆய்விடுகிருன். இது திரிபுடி ரகித நிலை.

இப்போது, நாம் தேகம் நான் என்றும், மற்ற உலகப் பொருள்கள் உண்டு என்றும் அறிகிருேம். நாம் எல்லாரும் இவ் வறிவு தான் உடையவர்கள். இவ் வறிவுக்குத் துவைத விருத்தி - பலவாக அறியும் அறிவு என்று பெயர். பஞ்ச கோச விவேகத்தின் இறுதியில் "தேகம் முதலியவை நான் அன்று; இவற்றை அறியும் அறிவு நான்" என்று அறியும்போது அவ் வறிவுக்குச் சாட்சி விருத்தி - எல்லாவற்றையும் அறியும் அறிவாகத் தன்னை அறியும் அறிவு என்று பெயர். தேகம் முதலியவற்றுக்கு வேருய், சத்து - சித்து - ஆநந்த சொரூபமாய் விளங்கும் நான் பிரம்மமே என்று சமாதி நிலையில் தன்னை அறிவது அகண்ட விருத்தி அல்லது அகண்டாகார விருத்தி - எங்கும் நிறைந்தவனுகத் தன்னை அறியும் அறிவு எனப்படும்.

தேகம்முதல் நானென்னல் துவித விர்த்தி
திகழ்சாட்சி நானென்னல் சாட்சி விர்த்தி
ஏகபரம் நானென்னல் அகண்ட விர்த்தி
இம்மூன்று விர்த்திகளில் இரண்டைத் தள்ளி
ஆகும்அகண் டாகார விருத்தி தன்னை
அநவரதம் ஆதரவாய் அப்யா சித்துச்
சோகமுறும் சித்தவிகற் பங்கள் தீர்த்துச்
சொன்னஅகண் டேகரச சொரூப மாவாய்.

—ரிபுகீதை.

வேதாந்தப் பயிற்சிகளில் மிக உயர்ந்ததாய் மோட்சத்தை உடனே தர வல்லதாய் இருப்பது இவ் வகண்டாகாரத் தியானம் என்பது,

பிறவாத நெறிஎனக் குண்டென்னி னிம்மையே
பேசுகர்ப் பூர தீப
மின்னும் படிக்ககண் டாகார வன்னைபால்
வினையேனை ஒப்பு வித்து
வீட்டுநெறி கூட்டிடுதல் மிகவு நன்று.

என்று தாயுமான சுவாமிகள் கூறுவதால் விளங்கும்.

இப் பயிற்சி உயர்ந்ததாயினும் பல வருடங்கள் வேதாந்தம் பயின்றவர்க்கும் இதில் மனம் நிற்ப தில்லை. அவர்கள் பொருட்டு நூல்கள் "அகண்டாகாரத் தியானம் செய்ய முடியா விட்டால், அகண்டாகாரத்தை உணர்த்தும் அகம் பிரம்மாஸ்மி மந்திரத்தை ஜெபித்துக்கொண்டிருக்க" என்று கூறும். விவேகம், வைராக்யம், சமாதி ஷட்க சம்பத்தி, முமுட்சுத்துவம் என்னும் நான்கு சாதனங்களைப் பயின்றுகொண்டு, வேதாந்த நூல்களை இடைவிடாது படித்துவருவது எல்லார்க்கும் நல்லது.

பஞ்ச கோச விவேகத் தியானம் செய்வதும் சாதனங்களில் ஒன்றும். அதற்குப் பகவான் சங்கராசாரியர் அருளிய விவேக ஷட்கம் மிகவும் உபயோகமாம். அது தமிழில் பாட்டாகவே நன்கு மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. அதனை இங்கே தருகின்றேன்.

## விவேக ஷட்கம்

அனித்திய பூதத் தேகம்நான் அன்று
இந்தியத் தரங்கம்நான் அன்று
நனித்த ஆங்காரப் பிராண வர்க்கங்கள்
அன்றுநற் புத்தியும் அன்று
தொனித்திடும் தாரம் மனை செல்வங் களுக்குத்
தூரமாம் சாட்சிநான் என்றும்
தனித்துநித் தியமாய்ப் பிரத்தியகான் மாவாம்
தத்பதப் பொருளதாம் சிவோகம். 1
உற்பவன் விருத்தன் அன்றுநான் ஓர்கா
லத்திலும் நசிப்பவன் அன்று
அற்பமாம் தேக காரியம் ஆன
அவையெலாம் அகங்கரத் தல்லால்
தற்பத வடிவாம் சின்மயம் ஆன
எனக்கிலை சகளநிட் களமாய்
எப்புறத் தேனும் எல்லையற் றிருக்கும்
இன்பசிற் சொரூபமாம் சிவோகம். 2
சத்திய ஞானா னந்தமாம் பிரமத்
துதித்திடும் மாயையிற் சனித்த
மெத்துமிவ் வுலகம் சேதனத் திடையே
நசிக்குமத் தேதென விளம்பின்
தத்துசொப் பனமும் சுழுத்தியில் அசத்தாம்
தன்மைபோல் சத்திலா திருக்கும்
சுத்தபூ ரணமாய் நித்திய மாகித்
துலங்கிய சொரூபமாம் சிவோகம். 3
பழுதைதன் னிடத்தில் பாம்புதோன் றுதல்போல்
பரப்பிர மத்திடை யதனில்
கழிதரும் அஞ்ஞா னத்தினுல் சீவன்
உதித்திடக் கண்டவன் ஒருவன்
பழுதையென் றதனுல் சர்ப்பமோ கமும்போய்ப்
பழுதையாய்க் கண்டது போல
அழிவில்தே சிகனுர் சீவன்நீ அன்றென்
றறைந்திட ஆகினேன் சிவோகம். 4

எமக்கும் அன் னியமாம் உலகமொன் றில்லை
எவ்வுல கங்களெம் மிடத்தில்
சமித்துஉற் பவமாம் ஆதலால் மாயை
வடிவம தேதெனிற் சாற்ற
அமைத்தகண் ணாடி விம்பமாம் நிழல்போல்
அடங்கிஎம் மிடத்தினில் விளங்கும்
தமத்துவம் இல்லாச் சச்சிதா னந்த
தத்பத விமலமாம் சிவோகம். 5

சாக்கிர மதனில் இந்திரி யங்கள்
தமக்குமேல் சாட்சியாம் சிவோகம்
தேக்குசொப் பனத்தில் உலகரூ பமதாய்ச்
செய்ம்மனச் சாட்சியாம் சிவோகம்
தாக்கிய சித்த நாசமாம் சுழுத்தி
அவத்தையில் சாட்சியாம் சிவோகம்
நீக்கமில் துரியா னந்தமாம் சர்வ
நிர்மல சாட்சியாம் சிவோகம். 6

"பஞ்ச கோசங்களுக்கும் வேறாய், (நனவு, கனவு, சுழுத்தி ஆகிய) மூன்று அவஸ்தைகளுக்கும் சாட்சியாய், சத்து-சித்து-ஆநந்த சொரூபமாய் நான் இருக்கிறேன்" என்று தியானிப்பது பஞ்ச கோச விவேகத் தியானம் அல்லது சாட்சித் தியானம் எனப்படும்.

இனி எந்த உயர்ந்த சாதனங்களைப் பயில்வதற்கும், அத்வைத ஞானம் திடமாக ஏற்பட்டிருக்க வேண்டும். இந்தத் திட ஞானம் உண்டாவதற்கு நீண்ட காலம் சிரவண மனன நிதித்யாசனங்களைப் பழகுவது தான் வழி. அத்வைத ஞானமாவது : "பிரம்ம சத்யம்; ஜகத் மித்யா; ஜீவப் பிரம்மைவ நாபரா—பிரம்மம் உண்மையானது; உலகம் பொய்யாகவே தோற்றுவது; ஜீவன் பிரம்மமே, வேறல்லன்." என்றுணர்வது. இவ் வுணர்வு இப்போது நாம், நாமெல்லாம் உரைரும் உணர்வுக்கு நேர் மாறானது. "உலகம் உண்மை; பிரம்மம் உண்டு என்று நூல்களும் பெரியோர்களும் கூறுகின்றனர்; ஆயினும் பிரம்மத்தை

எவ் வகையிலும் நாம் அறிய வில்லை. ஜீவனாகிய நாம் சுக துக்கங்களை அடைந்துகொண் டிருந்து, இறுதியில் இறந்து போகிறோம்" என்று அறிகிறோம். இந்த அறிவு போய் அந்த அறிவு உண்டாவது எத்துணை அரிது! எப்போது உண்டாகும்? எவ்வளவு முயற்சி வேண்டும்? இவ் வருமை தெரிந்த "பஞ்சதசி"யின் ஆசிரியர் ஸ்ரீ வித்யா ரண்ய சுவாமிகள், பிரம்மாப்பியாசத்தைப்பற்றி,

> தத்சிந்தனம் தத்கதனம் அந்யோன்யம்
> தத்பிரபோதனம்
> ஏதத் ஏகபரத்வம் ச பிரம்மாப்யாசம்
> விதுர்ப்புதா: ‖ —பஞ்சதசி: 690.

"தான் தனியாய் இருக்கும்போது அந்தப் பிரமத்தைச் சிந்தித்தல், வேதாந்த வேட்கை யுடையவர் வந்தால் அவர்களுக்கு அதனைச் சொல்லுதல், தன்போன்ற அப்யாசிகள் வந்தால் ஒருவருக்கொருவர் அதனைப்பற்றி உசாவுதல் என்னும் இவற்றில் தற்பரனாய் (வேறொன்றும் செய்யும் இச்சை யில்லாதவனாக இவற்றையே விருப்பத்தோடு செய்பவனாய்) இருத்தல் பிரம்மாப்யாசமாம் என்று பண்டிதர் அறிகின்றனர்" என்று கூறியிருக்கின்றார். இக் கருத்தை, "அதை உரைத்தும் அதை நினைத்தும் இருப்ப தன்றோ ஞானிகளுக் கான நீதி" என்று கைவல்ய நவநீதம்-145. கூறுகின்றது.

"நாம் இப்போதே அகண்டாகாரத் தியானம் பழகலாமே" என்று எண்ணும் அறியாமையும் பேராசையும் உடையவர் பலர் உளர். அன்பர்கள் நேர்ந்தபோதெல்லாம் காலத்தை வீணாக்காது வேதாந்த நூல்களைப் பயில்வதில் கருத்தைச் செலுத்துக.

> உடம்பினு லாய பயனுவ தெல்லாம்
> உடம்பினுள் உத்தமனைக் காண். —ஔவை குறள்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:



